# கல்கி

KALKI 3.2.91
ரூ. 2.50





## யுத்தம்:
## அதன் விளைவுகள்

# தாய்மை அடையும் பருவத்திலே உங்கள் இருவருக்காக "உண்ண" வேண்டுமே!

## இப்போது தேவை அதிக ஊட்டச்சத்துள்ள

## புதிய காம்ப்ளான்® விட்டாமில்க்(T)

உங்கள் வயிற்றில் இன்னொரு புதிய உயிர், உங்கள் குழந்தை வளர்ந்து கொண்டிருக்கிறது. இந்த முக்கிய நேரத்தில் சிசுவின் வளர்ச்சிக்கும், உங்கள் உடல் நலத்திற்கும் மிகத் தேவை சரியான ஊட்டச் சத்துக்கள். எனவே காம்ப்ளான்-விட்டாமில்க் அருந்துங்கள். இது கர்ப்பிணிக்கும் பிறக்கப்போகும் குழந்தைக்கும் உணவில் பற்றாத கூடுதல் ஊட்டச்சத்தை அளிக்கிறது.

காம்ப்ளான்-விட்டாமில்க்கில் காம்ப்ளானின் எல்லா நற்பயன்களும் உள்ளன. மேலும் உங்களுக்கும் பிறக்கப் போகும் குழந்தைக்கும் தேவையான கீழ்க்காணும் கூடுதல் ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.

- கூடுதல் ஃபாலிக் ஆஸிடு
- கூடுதல் பால்புரதம் (22.2 கிராம்)
- கூடுதல் வைட்டமின் A, $B_6$ மற்றும் C
- கூடுதல் இரும்புச்சத்து, அயோடின், கால்ஷியம், ஸிங்க் மற்றும் மக்னீஷியம்.

தினமும்




ரெகுலர் * சாக்லேட்

உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ

GL/V/P/90 TAM

# அது என்ன அறிவியல் பூங்கா?

**விளக்குகிறார், சென்னை அண்ணா பல்கலைக் கழகத் துணை வேந்தர் டாக்டர் எம். அனந்த கிருஷ்ணன்.**

**வி**ஞ்ஞானம், பொறியியல், தொழில் நுட்பம் ஆகியவற்றில் உயர்படிப்பு படித்து விட்டு, சொந்தமாகத் தொழில் ஆரம்பிக்க வேண்டும் என்ற துடிப்புடன் முன்வரும் இளைஞர்களுக்கு வாய்ப்பும் வசதியும் கிடைப்பதில்லை என்பது நம் நாட்டில் ஒரு பெரிய குறை! மூலதனம் கூட வங்கிகள் மூலம் கிடைத்து விடலாம்; ஆனால் தொழில் தொடங்க அனுபவ அறிவை எப்படிப் பெறுவது? இதற்கு உதவும் முயற்சிதான் அறிவியல் பூங்காக்கள்.

அறிவியல் பூங்காவை அணுகி, தொழில் திட்டத்தை முன் வைத்து உதவி கோரினால்,

- நடைமுறை விஞ்ஞான, தொழில் நுட்ப நுணுக்கங்கள்;
- இயந்திரங்கள், கருவிகள் இயக்கப் பயிற்சி;
- தாக்கட்டுப்பாட்டு நிர்ணயம் மற்றும் சோதனைகள்

முதலியவை பற்றிய விரிவான விளக்கங்களும், சந்தேக நிவர்த்திகளும் பெறலாம்.



உதாரணமாக: கம்ப்யூட்டர் உதிரி பாகங்கள் உற்பத்தி செய்ய விரும்பும் ஒரு நபர், அதைப் பற்றிய நடைமுறை அறிவை ஓர் அறிவியல் பூங்காவிலிருந்து பெற்றுக் கொள்ளலாம். இதனால் வெறும் ஏட்டு அறிவுடன் மட்டுமே தொழில் தொடங்கிக் கையைச் சுட்டுக் கொண்டு பின்வாங்கும் அபாயம் தவிர்க்கப்படுகிறது.

அறிவியல் பூங்காக்களில் ஏராளமான இயந்திரங்கள், பரிசோதனைச் சாலைகள், தாக்கட்டுப்பாட்டு நிர்ணய வசதிகள் ஆகியவை இருக்கும். ஆலோசனை வழங்க அறிஞர்களும் வல்லுனர்களும் இருப்பார்கள். தொழில் முனைவோர் தவிர, அவர்களிடம் வேலை செய்யவிருக்கும் தொழிலாளர்களுக்கும் அறிவியல் பூங்காவில் பயிற்சி அளிக்கப்படும்.

**அ**மெரிக்காவில், கம்ப்யூட்டர் தொழில்நுட்பமும் விண்வெளி விஞ்ஞானமும் அதிவேக வளர்ச்சி அடைந்த காலகட்டத்தில் (1980–81), இந்த நுண் தொழில்நுட்பத் துறைகளில் இறங்கி உற்பத்தியில் ஈடுபட்ட பலருக்குப் பிரச்னைகள் ஏற்பட்டன. இந்தத் தொழில் முனைவோரின் பிரச்னைகளைத் தீர்க்க உதவும் வகையாக அப்போது அமெரிக்காவில் ஏற்படுத்தப்பட்டவைதான் அறிவியல் பூங்காக்கள்.

இப்போது உலகில் நூறுக்கும் மேற்பட்ட அறிவியல் பூங்காக்கள் இருக்கின்றன. இந்தியாவிலுள்ள பன்னிரண்டு அறிவியல் பூங்காக்களுள் ஒன்று திருச்சியில் இருக்கிறது.

அண்ணா தொழில்நுட்பப் பல்கலைக் கழகம், ஐ. ஐ. டி., தோல் ஆராய்ச்சி நிறுவனம் போன்று சிறிதும் பெரிதுமாக நாற்பது நிறுவனங்கள், சென்னை அடையாறு பகுதியில் இருப்பதால், அங்கே ஓர் அறிவியல் பூங்கா ஆரம்பிக்கும் திட்டம் உள்ளது. இந்த வட்டாரத்துத் தொழில், கல்வி நிறுவனங்களில் உள்ள இயந்திரங்களையும், இங்கு பணியாற்றும் பேராசிரியர்களின் உதவி, ஆலோசனைகளையும் எளிதில் பெற முடியும். நுண்தொழில் நுட்பம் மட்டுமின்றிச் சாதாரணத் தொழில் நுட்ப வசதிகளும் இங்கே கிடைக்கும்.

**அ**றிவியல் 'பூங்கா' என்ற பெயர் ஏன் ஏற்பட்டது? பிரச்னைகளில் சிக்கித் திணறும் தொழில் முனைவர்களுக்கு ஆலோசனை என்னும் ஆரோக்கியமான காற்றை வழங்கக்கூடியவை இவை என்பதால்தான்!

— ப்ரியன்



கட்டுரைக்கான யோசனை வழங்கிய வாசகர்:
இரா. செண்பகராஜ்,
காரைக்குறிச்சி.



* பாலைவனப் பிரதேசத்தில் போரிடுவது எளிதல்ல.

# யுத்தம்: அதன் விளைவுகள்

யுத்தம் செய்தல், மானுடத்தின் கௌரவமிக்க தீரமான நடவடிக்கையாகக் கருதப்பட்டது போய், இன்று மிகக் கேவலமான நடவடிக்கை என்றே கொள்ளப்படுகிறது. இதற்குக் காரணம் மனிதனின் சகோதரத்துவ உணர்வு மேம்பட்டு விட்டது மட்டுமல்ல; விஞ்ஞான, தொழில்நுட்ப வளர்ச்சியின் காரணமாகப் போர்க் கருவிகளின் பிரயோகம் கற்பனைக்கெட்டாத பயங்கர விளைவுகளை ஏற்படுத்தும் என்பதுதான்.

அப்படியிருந்தும் இராக்கை எதிர்த்துப் போர்த் தொடுக்கும் நிலைக்கு அமெரிக்காவும், அதன் நேச நாடுகளும் தள்ளப்பட்டுள்ளன. காரணம் அதிபர் சதாம் ஹுசைனின் அதிகார தாகம் — பெட்ரோலியம் எண்ணெய் உற்பத்தி செய்யும் பாரசீக வளைகுடா நாடுகள் மீது இராக்கின் பிடியை வலிவுபடுத்தி, எண்ணெய் மார்க்கெட்டைத் தமது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர வேண்டும். இதன் மூலம் எண்ணெய்க்கு மாற்றாக, இதர நாடுகளிடமிருந்து நவீன போர்க் கருவிகள், அணு ஆயுதங்கள், தொழில் நுட்ப அறிவு போன்றவற்றைப் பெற்று உலகின் மிகப் பெரிய சக்தியாக விளங்க வேண்டும். இதுவே சதாம் ஹுசைனின் திட்டம்.

அமெரிக்கா தனது பெட்ரோலிய எண்ணெய்த் தேவையின் ஒரு பாதியை இறக்குமதி செய்தே சமாளிக்கிறது. இந்தத் தேவை வேறு தரப்புகளால் பூர்த்தி செய்யப்பட்டாலும் அமெரிக்காவின் பிரச்னைகள் தீராது. ஏனெனில் சதாம் ஹுசைனின் 'பேரம்' உலகப் பொருளாதாரத்தையே ஓர் உலுக்கு உலுக்கும். இதனால் அமெரிக்கா நிச்சயம் பாதிக்கப்படும்.

இந்தப் பதற்றம், பரபரப்புக்கு மறுபுறமாக ஜப்பானின் அமைதியான அணுகுமுறையைக் கவனியுங்கள்! ''சத்தாம் எண்ணெய் வளத்தையெல்லாம் வைத்துக் கொண்டு என்ன செய்வார்? அவ்வளவையும் குடித்தா செலவழிக்க முடியும்? விற்றுத்தானே ஆக வேண்டும்! கூடுதல் விலை கேட்கப் போகிறார், கொடுத்துவிட்டுப் போகிறோம்' என்கிறார்கள் ஜப்பானியர்கள்!

எண்ணெய் விலை கணிசமாக ஏறினா

* எண்ணெய்க்காக இரத்தம் சிந்துவதா...? அமெரிக்காவில் எதிர்ப்பு



னும் ஜப்பானியர்களுக்குக் கட்டுப்படியாகும். ஏனெனில் குறைந்த அளவு எரிபொருளைக் கொண்டு அதிகபட்ச எரிசக்தியைப் பெற்று, அதனைச் சிக்கனமாகப் பயன்படுத்தி நிறைந்த லாபம் பெறுவது எப்படி என்று மிகக் கவனமாக ஆராய்ந்து கண்டுபிடித்து, கடைப்பிடித்தும் வருகிறார்கள் இவர்கள். அதனால், இதர நாடுகளுக்குச் சாட்டையடியாக இருக்கக் கூடிய விலையுயர்வு ஜப்பானுக்கு வெறும் எறும்புக்கடி!



* பிரிட்டிஷ் டாங்கும், வீரர்களும்...

**பொ**ருளாதார முற்றுகைதான் ஈராக் மீது முதலில் தொடுக்கப்பட்ட போர். அந்தப் பொருளாதாரத் தடைகள் ஈராக்கைப் பலவீனப்படுத்தி வழிக்குக் கொண்டு வரும் என்று கருதப்பட்டது. அதே சமயம் ஐ. நா. சபைத் தீர்மானங்கள் மூலம் தார்மீக வற்புறுத்தலும் நடந்தது. பின்னது சதாம் உசேனைச் சற்றும் பாதிக்கவில்லை. ஜனவரி 15 கெடுவை அவர் அலட்சியம் செய்தார். ஆனால் முன்னது, அதாவது பொருளாதார முற்றுகை, இன்னும் சிறிது காலத்துக்குள் வில்லனைப் பணிய வைத்திருக்கும் என்பதாகவும், அவசரப்பட்டு நேச நாடுகள் தாக்குதலைத் தொடங்கி விட்டதாகவும் வலுவான ஒரு கருத்து நிலவுகிறது. இதனால் பல அமெரிக்கச் சிந்தனையாளர்கள் கொதிப்படைந்து போயிருக்கிறார்கள். அமெரிக்கச் சாதாரணப் பிரஜைகளுள் 62 சதவிகிதத்தினர் இராக்கைக் குவைத்திலிருந்து வெளியேற்றப் பலாத்காரத்தை மேற்கொள்வதற்கு ஆதரவு தெரிவித்தாலும், இன்னும் கொஞ்சம் அவகாசம் அளித்த பின்னரே தாக்குதல் தொடங்க வேண்டும் என்றனர்.

அமெரிக்க மக்களுக்கு உசேனின் அடாவடித்தனம் பிடிக்கவில்லை என்றாலும் தங்கள் பிள்ளைகள் — இளைஞர்கள் — எதற்காகப் போராடுகிறோம் என்பதே தெரியாமல் — ஓர் ஈடுபாடு இல்லாமல் — எங்கேயோ போய், யாருக்காகவோ உயிரை விடுவது சம்மதமில்லை. வியட்நாம் யுத்தத்தின் பயங்கர நினைவுகள் அவர்கள் உள்ளங்களில் இன்னும் பசுமையாக உள்ளன. அமெரிக்க மண்ணில் ஆக்கிரமிப்பு என்றால் வீரம் பொங்கும். குவெய்த் மீட்பு என்றால் வெறுப்பும் சலிப்பும்தான் ஏற்படுகிறது.

இது மனித இயல்பு.

இதை உணர்ந்துதான் அதிபர் ஜார்ஜ் புஷ்ஷும் கடைசி விநாடி வரை சமாதான முயற்சிகளை மேற்கொண்டதாகக் காட்டிக் கொள்ள விரும்பி இறுதி முயற்சியாக அமெரிக்கச் செயலர் ஜேம்ஸ் பேக்கரைத் தமது கடிதத்துடன் அனுப்பி வைத்தார். இவர், ஈராக் வெளியுறவுச் செயலர் அஸீஸைச் சந்தித்துப் பேசிய போது அமெரிக்க அதிபரின் இந்தக் கடிதத்தைக் கொடுத்தார். அஸீஸ் அதைப் பார்த்து விட்டு மேஜை மீதே வைத்துவிட்டுப் போய் விட்டார். கடிதத்தை சதாம் உசேனிடம் கொண்டு போய்ச் சேர்ப்பிக்கிற மரியாதையைக் கூடக் காட்டவில்லை! புகைப்படக் காரர்கள் வேண்டிக் கொண்டதற்காக, வேறு வழியின்றி இருவரும் கைகுலுக்கிக் கொண்டதுதான் மிச்சம். — பேச்சு வார்த்தை முறிந்தது.

**யு**த்தம் தொடங்கிவிட்டது. பாரசீக வளைகுடாவில் கே. தினத்துக்காக (Kuwait day) காத்திருந்த 3,70,000 இளம் அமெரிக்கச் சிப்பாய்களுக்கு வேலை வந்துவிட்டது. பாதுகாப்புக் கவசம் பூண்ட வண்டிகள் 15000; துப்பாக்கி உபகரணங்கள் 4000; போர் விமானங்கள் 2500. இவை, 6400 சதுர மைல் பரப்பில் இயங்கும்! குவைத்தின் மேல் பறக்கும் போர் விமானங்கள் ஒரு தற்காலிக சூரிய கிரகணத்தையே ஏற்படுத்தும் என்று

* அமெரிக்க இதழில் வெளியான கார்ட்டூன்.



எதிர்பார்க்கப்படுகிறது!

போர் ஆரம்பித்துச் சில நாட்களாக விமானப் படையயெடுப்பும் குண்டு வீச்சுத் தாக்குதலும்தான் நடைபெறுகிறது. இதற்குக் காரணம் உண்டு. வளைகுடாவில் இராக்கை எதிர்க்கும் தரைப்படை போதுமான ஆயத்த நிலையில் இல்லை என்று கருதப்படுகிறது. அவர்கள் பாலைவன மணல் பிரதேசத்தில் மணற்புயல்களுக்கு இடையே போராடிப் பழகாத வீரர்கள். மணற்புயல் வீசினால் தொலைத் தொடர்பு இணைப்புகள் மட்டுமின்றி வாகனங்களின் முக்கிய பாகங்களும் மணல் புகுவதால் பாழாகும் அபாயம் உண்டு. தவிர, பதினெட்டு நாடுகளைச் சேர்ந்த வீரர்கள் அடங்கிய படையை நடத்திச் செல்லும் பணியில் சிக்கல்கள் உள்ளன. ஒவ்வொரு நாட்டினரும் ஒவ்வொரு விதமாகப் பயிற்சி பெற்றவர்கள். மொழிச் சிக்கல் வேறு.

எனவே தரைப் படையைப் பயன்படுத்தாமல் விமானத் தாக்குதல் மூலம் இராக்கில் முக்கியமான ராணுவ, தொழில், தொலைத் தொடர்பு நிலையங்களை அழிப்பதே திட்டம். குவெய்த்தில் உள்ள ஈராக்கிய ஆக்கிரமிப்புப் படைகள் மீதும் விமானத் தாக்குதல் நடக்கிறது.

என்றாலும்; விமானத் தாக்குதல் மூலமே ஒரு நாட்டை ஆக்கிரமித்துவிட முடியாது; ஆக்கிரமிப்பாளரை அகற்றி விடவும் முடியாது. தரைப்படை உள்ளே நுழைந்து, ஆக்கிர

# யுத்தம் இந்தியாவை எப்படி பாதிக்கும்?



## முன்னாள் தலைமைச் செயலாளர் கே. சொக்கலிங்கம் பேட்டி...

அமெரிக்கா — ஈராக் யுத்தம் மறைமுகமாக நம்மையும் நிச்சயம் பாதிக்கத்தான் செய்யும். இந்தச் சண்டை ஒரு சில வாரங்களில் முடிந்துவிடும் என்பது என் கணிப்பு. மழைக்குப் பின் தூவானம் போல் போர் முடிந்த பின்னும் அதன் தொடர்பான பாதிப்புகள் இருக்கத்தான் செய்யும்.

நாம் வளைகுடா நாட்டிலிருந்து சற்றுத் தள்ளியே இருக்கிறோம் என்பதால் உபயோகப்படுத்தப்படும் வெடி மருந்து ரசாயனங்கள் விளைவிக்கும் கெடுதல் நம்மை அவ்வளவாக எட்டாது; பாதிக்காது. ஆனால் பொருளாதாரப் பாதிப்பு இருக்கும். எந்த விதத்தில்?

துரதிர்ஷ்டவசமாக, நாம் எரிபொருளுக்காக ஈரான் — ஈராக் நாடுகளையே சார்ந்து இருக்கிறோம். யுத்தம் என்பதால் அங்கிருந்து தேவையைப் பெறுவதில் சிரமம் உண்டு. எனவேதான், நிலைமை புரிந்து அரசாங்கம் மலேசியா, புருனே போன்ற நாடுகளிலிருந்து எண்ணெய் இறக்குமதி செய்யத் தீவிர முயற்சி செய்கிறது. கையிருப்புத் தீருவதற்குள் வந்து சேர்ந்துவிடலாம். தவறினால் விலைவாசி உயரும். அது தொடர்பாய் வாகன நிறுத்தம், வேலை இழப்பு...

தஞ்சாவூர்ப் பக்கத்து எங்கள் கிராமத்தில் விளையும் ஒரு பொருளை... பழமோ, தேங்காயோ, சென்னையில் வாங்கும் போது மூன்று மடங்கு விலை கூடி விடுகிறது. காரணம், வியாபாரிகளின் முதலீடு, லாபம், வாகனக் கட்டணம்! எண்ணெய்த் தட்டுப்பாடு என்று இல்லாத போதே இப்படியென்றால், பற்றாக்குறை ஒருவேளை வந்துவிட்டால் நிச்சயம் விலைவாசி உயர்ந்து நடுத்தர, கீழ்த்தட்டு மக்களைக் குறிப்பிட்ட காலத்திற்குப் பாதிக்கவே செய்யும்.

அதிர்ஷ்டவசமாக உணவு உற்பத்தி இந்த வருடம் திருப்திகரம். கையிருப்பும் போதுமானது. உணவு விஷயத்தில் பற்றாக்குறை என்கிற மாயபிம்பம்கூட எழ வாய்ப்பில்லை. பதுக்கல் மார்க்கெட்டைக் கட்டுப்படுத்தினாலே போதும்.

கஷ்ட நஷ்டங்கள் இருக்கட்டும். இந்த யுத்தத்தினால் லாபம் உண்டா?

தேவையில் ஏறத்தாழ ஐம்பது சதவீத எரிபொருள் நம் நாட்டிலேயே கிடைக்கிறது. ஓ. என். ஜி. சி. யில் சில நண்பர்கள் வாயிலாக அறிந்தபடி, முயன்றால் இன்னும் சில வருடங்களில் நாம் எரிபொருள் தன்னிறைவு பெற முடியும். வளைகுடா யுத்தம் அந்தத் தன்னிறைவை விரைவில் பெற வேண்டிய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தி இருக்கிறது.

பெட்ரோலியம் உற்பத்தியை விட முக்கியம் — சிக்கனம்! பஸ், மற்றும் அரசு வாகனங்களைக் குறைப்பதோடு, இந்த யுத்தப் பாதிப்பு நீங்கும் வரையிலாவது, அரசியல் ஊர்வலங்கள் அதற்காக ஆயிரக்கணக்கான வாகனங்கள் இவற்றைத் தவிர்த்தால் மனித நேரமும், எரிபொருளும் தேசத்திற்கு மிஞ்சும். இதுவே பொதுமக்களுக்கும் வழிகாட்டுவதாக அமையும்.

— நிருபர்






# மிருதுவான போஷாக்கு

**உங்கள் குழந்தைக்கு 4 மாதங்களாகும் சமயத்தில் அவனது இயற்கை உணவான பாலுடன் எளிதில் ஜீரணிக்க உகந்த போஷாக்கு உணவான நெஸ்டத்தையும் கொடுங்கள்.**

பாலுடன் கலந்து தயாரிக்கப்பட்ட நெஸ்டம் உங்கள் குழந்தையின் மிருதுவான முதல் திட உணவாகும். ஏனெனில் இதில் குழந்தை ஆரோக்கியமாய் வளர்வதற்குரிய எல்லா போஷாக்குகளும் சமச்சீர் அளவில் அடங்கியுள்ளன. உங்கள் குழந்தையின் உணவில் வெவ்வேறு சுவையைக் கூட்ட விரும்பினால், அவ்வகை உணவுடன் நெஸ்டத்தை கலந்து கொடுங்கள். உதாரணமாய் வேக வைத்த பழங்கள், வேகவைத்து மசிய வைத்த காய்கறிகள் மற்றும் பருப்பு வகைகள்.

அரிசி சேர்ந்த நெஸ்டம், போஷாக்கு நிறைந்த ஸீரியல் ஆகும். உங்கள் குழந்தை இதை எளிதில் ஜீரணிக்கும். உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு மருத்துவர்கள் சிபாரிசு செய்யும் எல்லாவித போஷாக்கும் இதில் உள்ளன. உறுதியான எலும்புகளுக்கும் பற்களுக்கும் தேவையான கால்ஷியம்; ஆரோக்கியமான ரத்தத்திற்கு தேவையான இரும்பு சத்து; பட்டு போல் பளபளக்கும் சருமத்திற்கும், ஒளிவீசும் கண்களுக்கும், நோய் எதிர்ப்பு சக்திக்கும் தேவையான வைட்டமின்களும் இதில் அடங்கியுள்ளன.

உங்கள் செல்லக் குழந்தை நெஸ்டத்துடன் சேர்ந்து வளர்வதை கவனியுங்கள்.

இலவச நெஸ்டம் செய்முறை புத்தகத்திற்கு எழுதுங்கள், போஸ்ட் பேக் 25, புது டில்லி-110016.

**எளிதில் ஜீரணிக்க வல்ல பேபி ஸீரியல்.**

**நெஸ்டம்**

மிப்பாளரை விரட்டியடித்து, தங்கள் செல்வாக்கை நிலைநாட்டும் போதுதான் வெற்றி பெற்றதாகக் கருதப்படும். எனவே, நேச நாடுகளின் படைகள் குவெய்த்துக்குள் நுழையத்தான் வேண்டும்; அப்போது எதிர்ப்பைச் சந்திக்கத்தான் நேரும். அச்சமயம் உயிர்ச் சேதம் குறைவாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் இப்போதைய ஏவு கணை, மற்றும் விமானத் தாக்குதல்கள்.

விமானத் தாக்குதலின் வலிமை குறித்துச் சந்தேகம் எழுப்புவோரும் உண்டு. வியட்நாம் யுத்தத்தின் போது, அமெரிக்க விமானங்கள் குண்டு மழை பொழிந்து விட்டு அகன்றதும் வியட்காங் வீரர்கள் ஒவ்வொருவராக மறைவிடங்களிலிருந்து வெளிப்பட்டதைச் சிலர் நினைவு கூர்கிறார்கள். குவெய்த்தின் எண்ணெய்க் கிணறுகளுக்கு ஈராக் வீரர்கள் தீமூட்டி, வானெல்லாம் கரும்புகை மண்டச் செய்து, விமான ஓட்டுனர்களுக்குக் கண் தெரியாமல் போகச் செய்யும் வாய்ப்பும் இருக்கிறது.

அமெரிக்காவின் உளவுத்துறை சரியாக இயங்கித் தகவல்களைச் சேகரிக்கவில்லை என்றும் இந்த யுத்தத்தில் இப்போது மெல்ல மெல்லத் தெரிய வருகிறது. ஈராக்கிய ராக்கெட்டுகள் மறைவிடங்களிலிருந்து திடீர் திடீரென்று புறப்படுவது மட்டுமல்ல; அவை நடமாடும் ராக்கெட் நிலையங்களாக வேறு உள்ளன! எனவே, எங்கே சென்று தாக்குவது என்று குழம்பும் நிலை ஏற்பட்டுள்ளது. சதாம் உசேனின் விமானப் படையின் பெரும்பகுதி இன்னும் பயன்படுத்தப்படவே இல்லை என்றும், தக்க தருணத்துக்காக அவர் காத்திருக்கிறார் என்றும் அமெரிக்கத் தளபதிகளே ஒப்புக் கொள்கிறார்கள்!

இந்த யுத்தத்துக்காக நேச நாடுகள் செலவிடும் தொகை பிலியன் டாலர் கணக்கில் உயர்ந்து கொண்டிருக்கிறது. ஒரு பிலியன் என்பது ஆயிரம் மிலியன் ஆகும். ஐம்பது பிலியன் நூறு பிலியன் என்றுதான் இப்போது கணக்குப் போடுகிறார்கள்!

செலவைக் குறித்துப் பொருளாதார வல்லுனர்கள் கவலை தெரிவிக்கிறார்கள் எனில் உலகெங்கும் பொது மக்களோ, '**no blood for oil**' என்று உயிர்ச் சேதத்துக்கு எதிர்ப்புத் தெரிவிக்கிறார்கள்.

நவீன ஆயுதங்கள் பயன்படுத்தப்படுவதால் உயிர்ச் சேதத்தின் பரிமாணம் கற்பனைக்கெட்டாத வகையில் இருக்கும். வியட்னாம் யுத்தத்தின் போது ஒரு வாரத்தில் 200 அமெரிக்கச் சிப்பாய்கள் இறந்தனர். இந்த வளைகுடா யுத்தத்தில் ஒரு மணி நேரத் தாக்குதலில் 200 உயிர்களை அழிக்கவல்ல ரசாயன ஆயுதங்களையும் **FAE** எனப்படும் **Fuel Air Explosive** களையும் ஈராக் பயன்படுத்தும்போது சேதம் இன்னும் பயங்கரமாக இருக்கும். நேச நாடுகளிடமும் இதுபோன்ற புதுமையான அழிக்கும், உயிர் குடிக்கும் ஆயுதங்கள் ஏராளம்.

இஸ்ரேலைத் தாக்கியதின் மூலம் சதாம் உசேன், பழைய வேரூன்றிய பகைமை உணர்வுகளைத் தூண்டி விட்டிருக்கிறார். இஸ்ரேல் ஈராக்கைத் திருப்பித் தாக்க வேண்டும் என்பது அவரது சாணக்கிய ஆசை. அது நிறைவேறினால், இப்போது ஈராக்கின் ஆக்கிரமிப்பை ஒப்புக் கொள்ளாது, நேச நாடுகளுக்கு ஆதரவு அளித்து வரும் பல அராபிய நாடுகளும், நேச நாடுகளுக்கு எதிராகத் திரும்பிவிடும்! அப்போது யுத்தத்தின் போக்கே வேறு திசையாக மாறிவிடும். ஓர் ஆக்கிரமிப்பை முறியடித்து குவெய்த்தை விடுவிக்கும் பணி என்பதாக அன்றி, மதச் சார்புள்ள யுத்தமாகி விடும்!

இந்த ஆபத்தைத் தவிர்க்க அமெரிக்கா ராஜதந்திர ரீதியாக ஏராள முயற்சிகளை எடுத்து வருகிறது. இஸ்ரேலும் இதுவரை ஒத்துழைப்பு அளித்து வருகிறது. ஆனால் நாளை என்ன காத்திருக்கிறதோ என்ற அச்சம் உலகை ஆக்கிரமித்துள்ளது. அந்த ஆக்கிரமிப்பு நீங்குவது எப்போது?

தொகுப்பு: **நமது நிருபர்கள்.**

---



"படம் முடிந்து வீட்டுக்குப் போகிற சமயத்துல, ஏன் அந்தத் தியேட்டர்ல 'இஞ்சி மொரப்பா' தர்றாங்க?"

"கதையை ஜீரணிக்க முடியலைன்னு யாரும் சொல்லிட முடியாது பாருங்க!"

— சீர்காழி. வி. ரேவதி.

"பால் சொசைட்டி தேர்தல்ல யாரெல்லாம் ஜெயிச்சிருக்காங்க?"

"'வேதா'ஜலம்', தணிகா'ஜலம்', சோணா'ஜலம்', அருணா'ஜலம்', பக்தவச்'ஜலம்'!"

— எஸ். சுவாமிநாதன்.





கல்லூரி மாணவர்
கட்டுரைப் போட்டி!

ரூ. 50 முதல்
பரிசுக் கட்டுரை

# பெண்கள் ஆண்டு: அறிவிப்பு எதற்கு?

**பெண்.** குழந்தை பெறும் சக்தி வாய்ந்த நவீன ரோபோ. பெண் இவ்வாறு தான் இன்று நடத்தப்படுகிறாள். சமுதாயம் பெண்ணுக்கு இழைக்கும் அநீதிகள் வேதனை தருவன. அதைவிட வேதனை தருவது பெண் சமுதாயமே பெண்ணுக்கு இழைக்கும் அநீதி. அதையும் விட வேதனை தருவது பெண் தனக்குத்தானே இழைத்துக் கொள்ளும் அநீதி!

பெண் குழந்தை பிறந்து விட்டதற்காக வருந்தாத பெற்றோரே இல்லை எனலாம். அவளை எப்படியாவது கல்யாணச் சந்தையில் 'தள்ளி' விட வேண்டும். அதற்கு நிறைய பணம் தேவை. மேலும், பெண் பாதுகாக்கப்பட வேண்டிய ஒரு பொருள். அவளை ஒருத்தன் கையில் பிடித்துக் கொடுக்கும் வரை வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டு வாழ வேண்டும். இதனாலெல்லாம் பெண், பிறந்த வினாடி முதல் பெற்றோர்களுக்கு ஒரு பாரமாகி விடுகிறாள். அந்தக் குடும்பத்தில் ஆண் பிள்ளைகள் இருந்தால் அவர்களுக்காக இவள் உணவு முதல் படிப்பு வரை பல விஷயங்களிலும் விட்டுக் கொடுத்துத்தான் ஆக வேண்டும். ஆண் பிள்ளைகளுக்குத் தான் எதிலும் முதலுரிமை! ஏனென்றால் அவர்கள்தான் பணம் காய்ச்சி மரங்கள்! இவள் பிள்ளை பெறும் இயந்திரம்தானே!

பெண் பாவை விட கேவலமாக நடத்தப்படுகிறாள். பெண்ணுக்குத் திருமணம் செய்யும் பெற்றோர் பெண்ணின் சம்மதம் கேட்பதே கிடையாது. அவர்கள் கழுத்தை நீட்டச் சொன்னால் நீட்ட வேண்டியதுதான். அப்படி நீட்டப்படும் கழுத்தில் முடிச்சுப் போடும் மாப்பிள்ளை கேட்கும் கூலியோ எக்கச்சக்கம். மாப்பிள்ளையின் தாய் முன்பு தான் பட்ட வேதனையைச் சிறிதும் மறக்காமல் மருமகள் வீட்டாரிடம் நீண்ட பட்டியல் தருவாள். தன் இனத்திற்கு அவள் செய்யும் தொண்டு அது! திருமணத்திற்குப் பிறகும் அவ்வப்போது பணமும் பொருளும் வாங்கி வரச் சொல்லி மருமகளைப் பெற்றோர் வீட்டுக்கு விரட்டி அடிப்பாள். வாங்கி வராவிட்டால் மருமகள் சமைக்கும் பொழுது ஸ்டவ் வெடிக்கும்!

பெண் கணவனை இழந்து விட்டால் விதவை. விதவையென்றால்? மூளி, பீடை. எதிரில் வந்தால் அபசகுனம். உணர்ச்சிகளை அவள் மரத்துப் போகச் செய்ய வேண்டியவள். வீட்டிலுள்ளோர்க்கு உழைக்க வேண்டிய கொத்தடிமை. இதைவிட உடன்கட்டை ஏறிச் செத்திருக்கலாமே



## டாக்ஸி ஓட்டும் பெண்!

ஒரே ஒரு பெண்தான் கல்கத்தாவில் டாக்ஸி ஓட்டுகிறார். அதன் சொந்தக்காரருமான அவர் டாக்ஸி ஓட்டி வந்த தம் கணவர் உடல்நலமில்லாமல் படுக்கையில் விழுந்த பிறகு ஒரு நபரிடம் டாக்ஸியை ஒப்படைத்தார். ஆனால் அவர் ஏமாற்ற ஆரம்பித்ததால் 29 வயதான ஜஸ்பீர் தாமே கார் ஓட்டக் கற்றுக் கொண்டார்.

இவருக்குச் சொந்தத்தில் ஒரு டிரைவிங் ஸ்கூல் நடத்தி பல பெண்களுக்குக் கார் ஓட்டக் கற்றுக் கொடுத்து, அவர்களையும் டாக்ஸி தொழிலில் தன்னம்பிக்கையுடன் ஈடுபடுத்த வேண்டும் என்பதுதான் லட்சியமாம்.

— 'சவ்வி.'

தகவல்: இந்திரா கோபாலன்.

என்று கூட அவனுக்குத் தோன்றி விடும்! உடன்கட்டை ஏற்றும் பழக்கத்தையாவது முற்றிலும் ஒழிக்க முடிந்ததா? அவ்வப்போது அது தன் பயங்கர உருவை வெளிக் காட்டுகிறது.

ஒரு ஆண் தன் மனைவியைத் தாழ்வாகவே நடத்துகிறான். தான் ஆள்பவன்; அவள் ஆளப்படுபவள் என்ற எண்ணமே அவன் மனத்தில் ஓங்கி நிற்கிறது. பெண்ணை, தன் வாழ்க்கைத் துணையாக அவன் பாவிப்பதே கிடையாது.

சமுதாயத்தின் பார்வையில் பெண் ஒரு காமப் பதுமையாகவே இருந்து வருகிறாள். பெண் சமுதாயமே இதை எதிர்க்கத் துணியவில்லை. அவ்வாறு எதிர்த்திருந்தால் ஆபாசமான திரைப்படங்களின் தயாரிப்பு நின்று போயிருக்கும். காபரே கூடங்கள் இழுத்து மூடப்பட்டிருக்கும். ஆனால், இங்கே, பள்ளி மாணவிகள் கூட சினிமாவில் தாங்கள் பார்த்த நைட் கிளப் நடனத்தை ரசித்து, பள்ளி விழாக்களில் அரங்கேறி, அது போலவே ஆடி, கைதட்டலைப் பெற்றுப் பெருமை அடைகின்றனர். பாவம் இன்னது செய்கிறோம் என்று அறியாமலே செய்கின்றனர்.

பெண், கையில் போடப்பட்டிருக்கும் விலங்கு, யார் பூட்டியதாய் இருந்தாலும் சரி, அவள் மனம் வைத்தால் அதை உடைத்தெறிய முடியும். நன்கு படித்த பெண்கள் கூடத் தங்கள் திருமணத்திற்குப் பணம் சேர்க்கவே படித்து வேலைக்குப் போகிறார்கள். பெரும்பாலான பெண்கள் அடிமைத்தனத்தை ரசிக்க ஆரம்பித்து விட்டார்கள். அது அவர்கள் ரத்தத்தில் ஊறிப் போய் விட்டது.

இதையெல்லாம் மாற்ற வேண்டுமானால் பெண் சமுதாயத்தை விழிப்புணர்வு கொள்ளச் செய்ய வேண்டும். பாரத மக்களைச் சுதந்திர உணர்வு கொள்ளச் செய்ததை விட இது சிரமமானதாய் இருக்கும்.

அடிப்படைத் தேவை சிறந்த கல்வி. தரமான, சிந்தனையைத் தூண்டும் கல்வி, எல்லாப் பெண்களுக்கும் கிடைக்கச் செய்ய வேண்டும். ''எட்டுமறிவினில் ஆணுக்கு இங்கே பெண் இளைப்பில்லை காண்!'' என்ற பாரதியின் சொல் செயலானால் அன்றுதான் சமுதாயத் தராசில் ஆணும் பெண்ணும் சமமாவார்கள்.

— எஸ். சிவானந்தவல்லி,
பி. லிட். (தமிழ்) முதலாம் ஆண்டு,
அஞ்சல் வழிக் கல்வி,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,
அண்ணாமலை நகர், — 608 002.

## உசிலம்பட்டி முதல் உடன்கட்டை ஏறுதல் வரை!

மதுரை உசிலம்பட்டி நிலையைப் பார்த்தீர்களா? பெண் குழந்தை பிறந்தால் உடனே கொலை செய்யப்படும்! எவ்வளவு பெரிய கொடுமை? கற்பு, கற்பு என்று கூறி, பெண்களை ஆண்கள் தங்கள் ஆதிக்க வலையில் சிக்க வைத்து அடிமைப்படுத்தினர். ஆண்களுக்குக் கற்பு கிடையாதா? இராஜஸ்தானில் இன்றும் நிலவுகிறது ''உடன்கட்டை'' ஏறும் மூடநம்பிக்கை. இதை ஆதரிக்கும் ஒருவர் மத்தியில் இன்றைக்கு மந்திரி! இவை போன்று இன்னும் பெண்களுக்கு இழைக்கப்படும் பலவிதமான அநீதிகளுக்கெல்லாம் முடிவு கட்டவே அடுத்த பத்து ஆண்டுகளும் பெண்கள் ஆண்டுகளாக அறிவிக்கப்பட்டுள்ளன.

— எம். முத்துக்குமார்,
இளங்கலை கணிப்பொறி அறிவியல்,
முதலாம் ஆண்டு,
காமராஜ் கல்லூரி,
தூத்துக்குடி — 3.

## நசுக்கப்படும் உணர்வுகள்!

பெண்களுக்கு இந்நாட்டில் மட்டுமின்றி உலகெங்கிலுமே அநீதிகள் இழைக்கப்படுகின்றன. இந்தியாவில் பல பெண் குழந்தைகள் கருவிலேயே அல்லது பிறந்த சில நாட்களிலேயே கொல்லப்படுகின்றன. அதனை மீறி வளர்பவை வரதட்சணையால் கொல்லப்படுகின்றன. அதிலும் தப்பியவை உணர்வுகளற்று நடைப்பிணங்களாகவே உள்ளன. இவற்றையெல்லாம் மீறி மிளிருபவை மிகச் சிலவே. பெண்களின் மன உணர்வுகளுக்கு உலகில் எப் பகுதியிலும் மதிப்பு கிடையாது. அவர்களின் உள்ள உணர்வுகள் நசுக்கப்படுகின்றன.

— மு. மீனாட்சி,
பி. எஸ்ஸி (இயற்பியல்),
இரண்டாமாண்டு,
பாத்திமா கல்லூரி,
மதுரை — 18.

# இலவசம்

## இலவசம்! இலவசம்!!

மறக்காமல்
கேட்டுவாங்குங்கள்.
அமிர்தாஞ்சன் தயாரிப்பான
கோல்ட்ரப்(5கிராம் டின்)

ஹேமமாலினி தயாரிக்கும்

**7-2-91 குமுதம் இதழுடன்**

இலவசமாக
வழங்கப்படும். கடைக்காரரர்
மறந்தாலும் நீங்கள் கேட்டு
வாங்கிக் கொள்ளுங்கள்.



# கல்கி

1991 பிப்ரவரி 3
மலர் : 49 இதழ் : 27
பிரமோதூத தை 21



## யுத்தத்தின் தலையில் பழியைப் போடு!

யுத்தம் வந்தாலும் வந்தது; நமது ஆட்சியாளருக்கு ரொம்ப வசதியாகப் போயிற்று! 'விலைவாசி இப்படி உயர்கிறதே, கத்திரிக்காய் கிலோ 12 ரூ சொல்கிறானே!' என்றால், 'என்ன செய்வது? வளைகுடாப் போர் நடக்கிறதல்லவா? பொறுத்துக் கொள்!' என்பார்கள்! 'பெட்ரோலிய எண்ணெய்க்குத்தானே தகராறு? அதற்காகத்தானே யுத்தம்? இங்கே கடலை எண்ணெய், நல்லெண்ணெய், சூரியகாந்தி எண்ணெய் முதலிய எல்லாமே விலை ஏறுகிறதே? ' என்றால், 'என்ன செய்ய, தியாகங்களுக்குத் தயாராக வேண்டும்' என்பார்கள்! 'அத்தியாவசியப் பொருள்களின் விலை இருக்கட்டும்; கிடைப்பதில்லையே, தட்டுப்பாடு உள்ளதே' என்றால், 'ஈராக் — அமெரிக்கா போர் முடியட்டும்; எல்லாம் சரியாகி விடும்' என்பார்கள். நொண்டிக் குதிரைக்குச் சறுக்கினது சாக்கு!

சுதந்திரம் பெற்றுக் கடந்த 43 ஆண்டுகளில் சரியான கொள்கைகள் கடைப் பிடிக்கப்பட்டிருந்தால், நாடு தொழில் துறையில் முன்னேறி, பொருளாதார ரீதியில் பலம் பெற்றிருக்கும். அத்தகைய நிலையில், இப்போது யுத்தத்தால் ஏற்படக்கூடிய பாதிப்புக் களைத் தாங்கும் சக்தியையும் நாம் பெற்றிருப்போம்; இவ்வளவு கவலையும் துயரமும் நமக்கு ஏற்படாது. ஆனால் 43 ஆண்டுகளாகக் கடைப்பிடிக்கப்பட்ட உருப்படாத கொள்கைகள் காரணமாக, தேசப் பொருளாதாரம் நொண்டிக் கொண்டிருக்கிறது. அதன் ஊன்றுகோல்களையும் பிடுங்கிக் கொண்டது போலாகி விட்டது, இப்போது!

வேடிக்கை என்னவென்றால், பிரதமரும் சிவில் சப்ளை அமைச்சரும் நாள் தவறாமல் டி.வி.யில் தோன்றி, 'ஒரு கஷ்டமும் இல்லை; எல்லாப் பொருள்களும் தாராளமாகக் கிடைக்கின்றன; விலைவாசிகள் உயராது; பதற்றமடைய வேண்டாம்' என்றெல்லாம் வார்த்தை ஒத்தடம் கொடுக்கிறார்கள்!

கன்யூட் என்ற அரசன், கடற்கரையில் சிம்மாசனத்தில் அமர்ந்து கொண்டு, ''அலைகளே, நில்லுங்கள்!'' என்று உத்தரவு போட்டது போல, இவர்களும், ''வியாபாரி களே விலைகளைக் குறையுங்கள்! நீங்களாகவே குறைக்கவில்லை என்றால் நாங்கள் கட்டாயப்படுத்திக் குறைக்க வைப்போம்! பதுக்கல்காரர்களே! ஜாக்கிரதை! கண்டுபிடிக்கப் பட்டால் தண்டிக்கப்படுவீர்கள்!'' என்றெல்லாம் பூச்சாண்டி காட்டுகிறார்கள். எந்த மிரட்டலுக்கும் பணியாமல் விலைவாசி உயர்கிறது; கள்ளச் சந்தை அதிகரிக்கிறது; பற்றாக்குறை மக்களைப் பீடிக்கிறது. வார்த்தை ஒத்தடம், இதம் அளிப்பதற்குப் பதில், எரிச்சலைத் தோற்றுவிக்கிறது.

இத்தனைக்கும் பிறகு ஆட்சித் தலைவர்களுக்கு ஞானோதயம் பிறக்கவில்லை என்பதுதான் துயரம். பொருளாதார நியதிகள் பல, இயற்கை நியதிகள் போன்றவை; அவற்றை இஷ்டத்துக்கு வளைக்க முடியாது என்பதை இவர்கள் புரிந்து கொள்ளவில்லை. வரப் போகிற பட்ஜெட் சோஷலிஸ பட்ஜெட்டாம்! அதாவது வரிகள், மேலும் வரிகள் என்று அர்த்தம்! பணக்காரர்களைத் தாங்களாகவே விட்டுக் கொடுக்குமாறு கேட்பார்களாம். இல்லையென்றால் நடவடிக்கை எடுத்து அடித்துப் பிடுங்குவார்களாம்! எல்லாம் காதிலே பூ சுற்றுகிற கதைதான்.

ஆப்ரஹாம்லிங்கன் சொன்னார்: ''சிக்கனத்தைக் கை விட்டு, சுபிட்சத்தை அடையவே முடியாது; பலவான்களைப் பலவீனப்படுத்துவதன் மூலம், பலமற்றவர்களைப் பலவான்களாக்கவே முடியாது; பணக்காரர்களை ஏழைகளாக்குவதன் மூலம், ஏழைகளுக்கு யாராலும் உதவவே முடியாது; கடன் வாங்கிய பணத்தைக் கொண்டு, உறுதியான, பாதுகாப்பான பொருளாதாரத்தை உருவாக்கவே முடியாது; வருவாய்க்கு அதிகமாகச் செலவிடுவதன் மூலம், கஷ்டத்தில் அகப்பட்டுக் கொள்ளாமல் தப்பவே முடியாது; தனி மனிதனின் ஊக்கத்தையும் சுதந்திரத்தையும் பறித்து, அவனை நேர்மையாளனாகவும் கடமையுணர்வுள்ளவனாகவும் விளங்கச் செய்யவே முடியாது; மக்கள் தங்களுக்குத் தாங்களே செய்து கொள்ள வேண்டியதைப் பிறர் செய்து கொடுப்பதன் மூலம், அவர்களுக்கு நிரந்தரப் பரிகாரம் கிடைக்கச் செய்யவே முடியாது!''

இதையெல்லாம் லிங்கன், மக்களுக்காகச் சொல்லவில்லை; ஆட்சியில் இருப்போருக்காகத்தான் கூறி வைத்திருக்கிறார். இந்தியாவில் அது, செவிடன் காதில் ஊதிய சங்கு.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# தலைப்பு தந்தது திகைப்பு!

● 'கற்பனைக் குதிரையைத் தட்டிவிட்டுக் குற்றஞ் சாட்டுவோர், சதாம் ஹுசைனின் பிடிவாதத்துக்கும் கலைஞர்தான் காரணம் என்று கூறாமல் விட்டு விட்டதற்குக் கலைஞர் நன்றி கூற வேண்டும் என்று குறிப்பிட்டது இருக்கட்டும். சாட்டையடி போல பதிலளித்து, கற்பனைக் குற்றச்சாட்டு என்று ஆணித்தரமாகக் குறிப்பிட்ட தராசுக்கு உண்மையிலேயே நன்றி கூற வேண்டுமல்லவா கலைஞர்!

கொணவட்டம். கே. ஆர். தேவேந்திரன்.

● மக்களிடம் உறுதிமொழி வாங்கும் அரசியல்வாதி ஒருவரிடமே உறுதிமொழி வாங்கிய நன்னிலம் சீர்காழி தொகுதி மக்கள், உண்மையிலேயே கில்லாடிக்குக் கில்லாடி(கள்)தான்!

அரவக்குறிச்சிப்பட்டி. எம். அசோக்ராஜா.

● மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சரின் ஆத்மா இப்போதுதான் விழித்துக் கொண்டதா?

அவர் கூறியதைச் செயல்படுத்தட்டும்-வெறும் பேச்சாக விட்டுவிடாமல் இருந்தால் சரி!

மேட்டுப்பாளையம். பி. ஏ. வஹாத்.

● தபால் இலாகாவினரின் வேலை நிறுத்தத்தினால் நாட்டில் எத்தகைய விளைவுகள் ஏற்பட்டன என்பதையும் விளக்கி, பரிகாரத்தையும் சொன்ன உமது தலையங்கத்தைப் பாராட்டி வரவேற்கிறேன்.

பெங்களூர் — 21. ப. மூர்த்தி.

● 'சரஸ்வதி கடாட்சம்' அற்புதமான சிறுகதை. ஒவ்வொரு வரியும் உள்ளத்தைத் தொட்டது. இதுவரை வெளிவராத வித்தியாசமான கருவைக் கொண்ட கதையாகத் திகழ்ந்தது.

தக்கோலம். முஸ்தபா.

● 'ஜிட்டா' — சின்னக் கதைதான். ஆனால் 'எப்பொழுதும், எந்தத் தொழிலும் கேவலமில்லை; நம் தொழிலே நமக்குத் தெய்வம்' என்ற உயர்ந்த கருத்தைச் சொன்னதால் சிறப்பான கதையாகி விட்டது.

தஞ்சாவூர் — 1. இரா. ஆதிநாராயணன்.

● 'வில்லியாக மாறிய கதாநாயகி' — துணிச்சலான தலைப்பு. தந்தது திகைப்பு!

தஞ்சாவூர். ஏ. ஆர். வனிதா.

● 'வில்லியாக மாறிய கதாநாயகி' — தலைப்பு கவர்ச்சியானதுதான். கதாநாயகி வில்லியாக ஆக்கப்பட்டது யாரால்?... சொல்லத் தேவையில்லை... வில்லியாக மாற்றப்பட்ட கதாநாயகி வெற்றி பெற்றால் வியப்பில்லை!

வேலூர். பூரணி அருணாசலம்.

● பொன்முடியின் பதில் ஒன்றும் நம்பும்படி இல்லை. 'அரசு மருத்துவமனைகளில் லஞ்சம் இல்லை' என்று கூறுகிறாரே! அவர் என்ன, தமிழ்நாட்டில் தான் இருக்கிறாரா...?

திருவெண்ணெய்நல்லூர். வி. என். நாதன்.

● ஆயுர்வேத, சித்த முறைகளில் தங்கத்தின் ஒளிக் கதிர்கள் தொண்டைப் பகுதியில் படுமானால் புட்டம்மை நோய்க்கு நிவாரணம் கிடைக்கும் என்று கூறப்பட்டுள்ளது. பொன்னின் வியப்படுத்தப்பட்ட மருந்துதான் ஆரம் மெட்டாலிக்கம். ஹோமியோபதி முறையில் புட்டம்மைக்கு இது ஒரு சிறந்த மருந்து. ஆகவே, இந்த நோயைப் 'பொன்னுக்கு வீங்கி' என்று அழைப்பதிலோ, அதற்கு நிவாரணமளிக்கப் பொன் சங்கிலியை நோயாளிக்கு அணிவிப்பதோ மூட நம்பிக்கை என்று பழிப்பது தவறு. தக்க தருணத்தில் மருத்துவம் புரியாவிட்டால், இந்த நோய் முற்றித் தொண்டை அடைப்பானாக (diptheria) மாறும் அபாயமும் உள்ளது. ஏழு நாட்களில் இது தானாகக் குணமாகிவிடும் என்று வாளாவிருப்பது தவறு.

தில்லைஸ்தானம். தி. சா. ராஜு, (ஹோமியோபதி மருத்துவர்).

● கல்கி 6.1.91 இதழில் ''கோபுரமாய் உயரும் சர்ச்சைகள்'' கட்டுரை தொடர்பாகத் தங்கள் நிருபர் என்னை அணுகிய போது, சனிப்பெயர்ச்சி வேலைகள் மும்முரமாக நடந்து கொண்டிருப்பதாலும் கடந்த மாதம்தான் நான் பொறுப்பேற்றுக் கொண்டதாலும் இராஜகோபுரம் கட்டும் பணி சம்பந்தமாக நான் ஏதும் கூற இயலாது. இன்னும் அது சம்பந்தமானவற்றை நான் கவனிக்கவில்லை என்றுதான் கூறினேன். 'கமிட்டி அமைப்போம், அர்ச்சகர், ஸ்தானிகர்களுடன் கலந்து பேசுவோம், புதுவை வந்த காஞ்சி ஸ்வாமிகளிடம் இவ்விஷயம் தெரிவிக்கப்பட்டது' என்று நான் கூறியதாகக் கூறப் பட்டுள்ளது சரியல்ல.

(சனீஸ்வர பகவான் கோவில்),
திருநள்ளாறு. ஆர். சீதாராமன்.
தனி அதிகாரி.

கல்கி 6.1.91 இதழில் ''சனி பகவான் சன்னதியில் கோபுரமாய் உயரும் சர்ச்சைகள்'' என்ற தலைப்பில் கட்டுரை வெளியிடப்பட்டுள்ளது. அதில் சில தவறுகள் உள்ளன.

அர்ச்சகர்களும் ஸ்தானிகர்களும் இக்கோவிலுக்கு ராஜகோபுரம் கட்டுவது ஆகம விதிகளுக்குப் புறம்பானது என்று 1989 ஆம் ஆண்டு மத்தியில் தான் எதிர்ப்புத் தெரிவித்தனர். 1982 லிருந்து அல்ல. திருநள்ளாறு கோவில் தருமபுர ஆதீனத்தின் கீழ் வருவது அன்று. இது, புதுவை இந்து சமய நிறுவனத் துறை ஆளுகையில் உள்ளது. கோவிலுக்கு ஏற்கெனவே மூன்று கோபுரங்கள் இருப்பதாகவும் கட்டப்போகும் ராஜகோபுரம் நான்காவது கோபுரம் என்பதும் சரியல்ல. தற்போது உள்ளவை இரண்டு. கட்டப்போவது மூன்றாவது. அதாவது, ராஜகோபுரம். நான் சமீபத்தில் தனி அதிகாரிப் பொறுப்பிலிருந்து விடுவிக்கப்பட்டதாகச் சொல்வது தவறு; நானாக விலகிக் கொண்டிருக்கிறேன்.

காரை நகர மன்றம், மு. சதானந்தம்.
காரைக்கால். தனி அதிகாரி.

திரைவிழாப் படக்கதை
(பிரான்ஸ்)



# சட்டத்தின் சார்பில் சில கொலைகள்!

**அ**வர்கள் நால்வரும் ஒரு கோஷ்டி. மூவர் இளைஞர்கள். நாலாவது அவள். பெயர் நிகிதா. வயது இருபது. வழி மாறிப் போன கோஷ்டி அது. போதை மருந்துப் பழக்கம். அதன் விளைவாக எப்போதும் நீடித்து நிலைத்த பணத் தேவை. அதற்காகக் கொள்ளை. அந்த நேரத்தில் எதிர்ப்பட்டோரைக் கொலை... இப்படித் தொடர்ந்தது அவர்கள் வாழ்க்கை.

ஒரு நாள் இரவு போதை மாத்திரை வாங்குவதற்குப் பணம் இல்லாமல் போய், அந்த மூன்று இளைஞர்களில் ஒருவனுடைய வீட்டிலேயே பணம் தேடப் போன போது தான் சிக்கல் ஏற்பட்டு விட்டது. விழித்துக் கொண்டு விட்ட அவன் பெற்றோர் போலீசுக்குப் போன் செய்து விட, ஒரு லாரி நிறையப் போலீசார் வந்து சூழ்ந்து கொண்டனர்.

தொடர்ந்து ஏகப்பட்ட துப்பாக்கிச் சூடு. அதில் அந்த மூன்று இளைஞர்களும் பலியாகிப் போனார்கள். சில போலீசாரும் கூட. நிகிதா மாட்டிக் கொண்டாள். வழக்கு நடைபெற்றது.

"முப்பத்தைந்து ஆண்டுகள் சிறை வாசம்" என்று தீர்ப்பளித்தார் நீதிபதி.

அதைக் கேட்ட போது ஓவென்று அலறினாள். அவள் வாழ்வில் ஒரு திருப்பம் ஏற்படவிருந்ததை அப்போது அவள் அறிந்திருக்கவில்லை.

**அ**றைக் கதவு திறந்து மூடிய ஒலி கேட்டு நிமிர்ந்து பார்த்தாள் நிகிதா. அந்த ரகசியப் போலீஸ் அதிகாரி நிதானமாக நடந்து வந்து அவள் எதிரே அமர்ந்தார்.

"நேற்று நீ இறந்து போய், உன் ஈமச் சடங்குகளும் நடைபெற்று விட்டன" என்றார்.

"என்ன?" — கேட்ட போது அவள் குரலில் அதிர்ச்சி தென்பட்டது.

"ஆமாம். நீ தற்கொலை செய்து கொண்டு விட்டாய். உன் காரியங்கள் முடிந்து விட்டன. நாங்கள் வெளியிட்ட செய்தி அது."

சொல்லி விட்டு ஒரு செய்திப் பத்திரி

## பொன்மொழி பாக்கெட்

**இரண்டு யூதர்கள் ஒருவருக்கொருவர் வாக்குவாதம் செய்யும் பொழுது மூன்று கருத்துக்களைக் காணலாம்.**

**— யூதர் பழமொழி.**
**— என். ஆறுமுகம்.**

**தன் தந்திரங்களைப்பத்தாண்டுகளுக்கு ஒருமுறைமாற்றிக்கொண்டிருப்பவனால் தான் எப்போதும் தலைவனாக இருக்க முடியும்.**

**— நெப்போலியன்.**
**— மன்னை சுவாமி.**

**கூடாரங்களைத் தனித் தனியாக அமையுங்கள்; ஆனால் இதயங்கள் சேர்ந்திருக்கட்டும்.**

**— அரேபியப் பழமொழி.**
**— எஸ். எஸ்.**

கையை அவள் முன் போட்டார்.

அப்படித்தான் அதில் வெளியாகி இருந்தது. அதை அவள் படித்து முடித்த போது சொன்னார்.

''நாங்கள் சொல்கிறபடி நீ செய்வதாக இருந்தால் மீண்டும் சுதந்திரப் பறவையாக நடமாடலாம். இல்லையென்றால் ஆயுள் முழுதும் நீ இங்கேயே கிடந்து மடிய வேண்டியதுதான். வெளியுலகைப் பொறுத்த வரையில், நீ உயிரோடு இல்லை.''

அதிர்ச்சி விலகாமலே அவள் கேட்டாள்.

''நான் என்ன செய்ய வேண்டும்?''

''இதுவரை செய்து வந்ததைத்தான். கொலை... ஆனால் உன் விருப்பப்படி அல்ல. நாங்கள் குறிப்பிடும் ஆட்களை... நாங்கள் சொல்லும் இடங்களில்... எங்களுக்கும் நாட்டுக்கும் எதிரானவர்களை...''

''நோ... நோ... நோ...'' — அலறினாள் அவள்.

''யோசித்துச் சொல்லு. நான் அப்புறம் வந்து பார்க்கிறேன்.''

சொல்லி விட்டுப் போய்விட்டார் அவர்.

முதலில் மறுத்தாலும் முடிவில் அவள் அதற்கு ஒப்புக் கொள்ளத்தான் வேண்டியிருந்தது. அந்தத் தனிமைச் சிறைக் கொடுமையிலிருந்து விடுபட, மீண்டும் சுதந்திர வாழ்க்கையை மேற்கொள்ள அதைத் தவிர வேறு வழியில்லை.

அவளுக்குப் பயிற்சியளிக்கத் தொடங்கினார்கள். கராத்தேயில் பயிற்சி. தற்காப்புக் கலைகளில் பயிற்சி. ஆயுதங்களைக் கையாள்வதில் பயிற்சி. குறிபார்த்துச் சுடுவதில் பயிற்சி. நாகரிகமாக நடந்து கொள்வதில், பேசுவதில், ஒப்பனை செய்து கொள்வதில், உடையணிவதில்...

மூன்றாண்டுகள் இந்தப் பயிற்சி நீடித்தது. அதன்பின் ஒருநாள் அவள் விடுதலை செய்யப்பட்டாள். அந்த ரகசியப் போலீஸ் அதிகாரி சொன்னார்.

''இதுதான் உன் முகவரி. இந்த அபார்ட்மெண்ட் உனக்காக வாடகைக்கு எடுக்கப்பட்டது. அதற்கு அருகாமையில் உள்ள மருத்துவமனையில் உனக்கு நர்ஸ் வேலை என்று கூறும் அத்தாட்சிக் கடிதம் இது. மாதா மாதம் பாங்கில் உன் சம்பளம் சேர்த்து விடப்படும். அதுவரையில் கைச் செலவுக்கு இந்தப் பணம். நீ போகலாம்...''

அவர் கொடுத்தவற்றை வாங்கிக் கொண்டாள். வெளியே நடந்தாள்.

சுதந்திர வாழ்க்கை சுகமாக இருந்தது. அவள் உள்ளத்தில் மெலிதாக வசந்தம் அரும்பு விடத் தொடங்கியது. காதல் வயப்பட்டிருந்தாள். அந்தக் காதலன் ஒரு டிபார்ட்மெண்ட் ஸ்டோரில் பணியாற்றிக் கொண்டிருந்தான்.

ஒருவர் மீது அன்பு செலுத்துவது, அவருடைய அன்பில் தான் திக்குமுக்காடுவது எத்தகைய இன்பமான அனுபவம்! அதில் அவள் திளைத்தாள். நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன.

கிட்டத்தட்ட எல்லாவற்றையும் மறந்து, ஒரு புதிய — வித்தியாசமான வாழ்க்கையில் ஈடுபடத் தொடங்கி, அது கொண்டு தந்த உல்லாசத்தில் அவள் மூழ்கிக் கொண்டிருந்த போதுதான் முதல் அழைப்பு வந்தது.

வேறொரு ஊருக்குச் சுற்றுலாப் பயணியாகச் சென்று ஒரு குறிப்பிட்ட நபரைத் தீர்த்துக் கட்ட வேண்டும்...

தொடர்ந்து இரண்டாவது அழைப்பு... மூன்றாவது அழைப்பு...

அழைப்புகள் இப்படி நீடித்த போது அவள் நிலைகுலையத் தொடங்கினாள். இது என்ன வாழ்க்கை? ஒவ்வொரு முறையும் காதலனுக்கு ஏதேதோ காரணங்கள் சொல்லி, அவனை ஏமாற்றி நாடகமாடி, இப்படி ஒரு இரட்டை வாழ்க்கை எத்தனை நாட்களுக்கு நீடிக்க முடியும்?

சிறைக்குள் இல்லையே தவிர, ஒரு சிறைப்பட்ட வாழ்க்கையை, எந்தவிதச் சுதந்திரமும் இல்லாமல், மற்றவரது ஆணையை மீற முடியாத வாழ்க்கையை மேற்கொண்டு மூச்சுத் திணறுவதைப் போல உணர்ந்தாள்.

அந்த உணர்வு கொஞ்சம் கொஞ்சமாக வலுப் பெறத் தொடங்கி, ஒரு வெளிநாட்டுத் தூதுவரகத்தில் ஓரிரவு புகுந்து சில ரகசிய தஸ்தாவேஜுகளைக் கிளப்பிக் கொண்டு வந்த போது நடைபெற்ற சில கொலைகளைத்தொடர்ந்து, உச்சம்பெற்றது.

அவள் வெடித்து அழுதாள்.

''முடியாது... இனிமேல் என்னால் முடியாது...''

அப்போதுதான் அந்தக் காதலன் சொன்னான்:

''எனக்குத் தெரியும்.''

''என்ன?''

*மீண்டும் ஓர் அரிய வாய்ப்பு !*

# ரூ. 150 பெறுமான
# லிப்கோ புத்தகங்கள் இலவசம் !

ரூ. 1000-ஐ எம்மிடம் முதலீடு செய்பவர்களுக்கு (இந்தியாவில் உள்ளவர்களுக்கு மட்டும்) ரூ. 150 பெறுமான அவர்கள் விரும்பும் லிப்கோ புத்தகங்கள் முற்றிலும் இலவசமாக உடனடியாக அனுப்பிவைக்கப்படும். 3 வருடங்களுக்குப் பிறகு அந்த முதலீடு ரூ. 1,350 ஆகத் திருப்பித் தரப்படும். முழு விவரங்களுக்கும், விலைப் பட்டியலுக்கும், விண்ணப்பத் தாளுக்கும் எழுதுக.

குறிப்பு: சட்டப்படி நிர்ணயிக்கப்பட்டுள்ள எண்ணிக்கைக்குட்பட்டு முதலில் வரும் முதலீடுகளைமட்டுமே ஏற்றுக்கொள்ள இயலும்.

## பயன்தரும் லிப்கோ புத்தகங்களில் சில :

| | | ரூ.காசு |
|---|---|---|
| 1. | தமிழ்- தமிழ்-ஆங்கில அகராதி | 38.00 |
| 2. | ஹிந்தி-தமிழ் அகராதி | 30.00 |
| 3. | ஹிந்தி ஆசிரியன் | 10.00 |
| 4. | ஆங்கில ஆசிரியன் | 22.00 |
| 5. | சமைப்பது எப்படி? | 8.00 |
| 6. | குழந்தை வளர்ப்புக் கலை | 5.00 |
| 7. | இயற்கை தரும் இன்மருந்துகள் | 14.00 |
| 8. | வள்ளுவர் மொழியும் தெள்ளிய உரையும் | 5.00 |
| 9. | ஸுந்தர காண்டம் - மூலம் ஸம்ஸ்க்ருதத்தில் | 14.00 |
| 10. | ஸுந்தர காண்டம் - மூலம் தமிழில் | 14.00 |
| 11. | ஸுந்தர காண்டம் - ஸ்ரீ C.R.S. தமிழ் வசனம் | 27.00 |
| 12. | ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் - ஸ்ரீ C.R.S. தமிழ் வசனம் - 2 பாகங்களில் - 1800 பக்கங்கள் | 150.00 |
| 13. | ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும் - ஸ்தோத்ரமாலையுடன் | 16.00 |
| 14. | ஸ்தோத்ரமாலை | 5.00 |
| 15. | ஸ்ரீ வீர ஆஞ்ஜநேயர் | 4.00 |
| 16. | கம்ப ராமாயணம் - வசனம் | 15.00 |
| 17. | ஸாளக்ராம திவ்யதேசம் | 2.00 |
| 18. | குமாரஸம்பவம் - உரையுடன் | 25.00 |
| 19. | ருது ஸம்ஹாரம் - கருத்துரையுடன் | 4.00 |
| 20. | தெய்வீக மூலிகைகள் | 4.00 |
| 21. | ஸ்ரீமத் பகவத் கீதை - மூலம், தமிழில் உரையுடன் | 13.00 |
| 22. | மாங்கள்ய ஸ்தவம் | 2.00 |
| 23. | ஸ்ரீ லக்ஷ்மீநாராயண ஹ்ருதயம் | 1.50 |
| 24. | ஸ்ரீ நாராயண கவசம் | 2.00 |
| 25. | ஸ்ரீ வராஹ கவசம் | 2.00 |
| 26. | நாலாயிர திவ்யப் பிரபந்தம் — 2 பாகங்களில் | 80.00 |
| 27. | நூற்றெட்டு ஸ்ரீவைஷ்ணவ திவ்யதேச வைபவம் | 8.00 |
| 28. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் - மூலம் ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் - அர்த்தத்துடன் | 15.00 |
| 29. | ஸ்ரீ தேசிகப் பிரபந்தம் - உரையுடன் | 48.00 |
| 30. | ஸ்ரீ தேசிகப் பிரபந்தம் - மூலம் | 8.00 |
| 31. | ஸ்ரீ தேசிக ஸ்தோத்ரங்கள் - உரையுடன் | 60.00 |
| 32. | ஸ்ரீ தேசிக ஸ்தோத்ரங்கள் - மூலம் தமிழில் | 9.00 |
| 33. | ஸ்ரீ ரங்கநாத திவ்யமணி பாதுகைகளும் ஸகல காரிய ஸித்தியும் | 3.00 |
| 34. | ஸ்ரீரங்க மாஹாத்மியம் | 8.00 |
| 35. | ஸ்ரீ குருவாயூர் அப்பன் ஸுப்ரபாதம் | 0.60 |
| 36. | ஸ்ரீ முகுந்தமாலை | 2.00 |
| 37. | பஜ கோவிந்தம் | 2.00 |
| 38. | ஸ்ரீ மஹா பக்த விஜயம் | 20.00 |
| 39. | அபயாம்பிகை சதகம் | 8.00 |
| 40. | அபிராமி அந்தாதி - உரையுடன் | 3.00 |
| 41. | ஸ்ரீ ஸௌந்தர்யலஹரி - உரையுடன் | 4.00 |
| 42. | ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீ தேவி பாகவதமும் | 6.00 |
| 43. | பெரிய புராணம் - சுருக்கம் | 2.50 |
| 44. | திருவிளையாடற் புராணம் - சுருக்கம் | 2.50 |
| 45. | ஸ்ரீ ஸத்யநாராயண வ்ரதம் | 2.00 |
| 46. | ஸ்ரீ லக்ஷ்மீ குபேர பூஜாக்ரமம் | 1.25 |
| 47. | குடும்ப ஜோதிடம் | 12.00 |
| 48. | நவக்ரஹ க்ஷேத்ர புராணம் | 7.20 |
| 49. | ஸ்ரீ சனிக்ரஹ சாந்தி பூஜா விதானம் | 3.00 |
| 50. | விரத பூஜா விதானம் - 36 பூஜைகள் | 12.00 |
| 51. | உங்கள் பிறந்த தேதியும் வாழ்க்கை ரகசியங்களும் | 4.00 |
| 52. | உடல் மச்சங்களும் உங்கள் வாழ்க்கை ரகசியங்களும் | 3.00 |
| 53. | திருப்புகழ் மஞ்சரி | 3.00 |
| 54. | ஆறுமுகனுக்குகந்த ஆறு படைவீடுகள் | 11.00 |
| 55. | ரிஷிகளும் கோத்ரங்களும் | 6.50 |
| 56. | ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ கராவலம்ப ஸ்தோத்ரம் | 2.00 |
| 57. | ஷட்பதீ ஸ்தோத்ரம் | 2.00 |
| 58. | கௌரீ கல்யாணம் வைபோகமே - கல்யாண, பண்டிகை, மங்கள ஹாரதி பாட்டுகள் | 8.00 |
| 59. | ராகவ யாதவீயம் | 6.00 |
| 60. | நாமக்கல் கவிஞர் பாடல்கள் | 36.00 |
| 61. | பல்லவினி - சரித்திர நாவல் | 25.00 |
| 62. | நன்னாள் அன்பளிப்பு | 10.00 |
| 63. | Idioms & Phrases | 7.00 |
| 64. | How to Cook? | 10.00 |
| 65. | Bhagavan Ramanuja | 2.50 |




விவரங்களுக்கு :

## தி லிட்டில் ப்ளவர் கம்பெனி

ரங்கநாதன் தெரு, தியாகராயநகர், சென்னை - 600 017

போன்: 441538

62 ஆண்டுகளாகப் புத்தக உலகில் பெரும்புகழ் !

''எல்லாமே தெரியும் உன்னைப் பற்றி.''

அவள் அவனை வெறித்துப் பார்த்தாள்.

''ஆமாம். எல்லாமேதான்'' தொடர்ந்தான் அவன். ''உன்னைத் தேடி ஒருநாள் அந்த நர்சிங் ஹோமுக்குப் போன போதுதான், அந்தப் பெயரில் யாருமே அங்கே வேலையில் இல்லையென்பது தெரிய வந்தது. அதன்பின் உன்னை... உன் நடவடிக்கைகளைக் கவனிக்க ஆரம்பித்தேன். என் கண்ணுக்குத் தெரிவது உன்னுடைய உண்மையான வாழ்க்கை இல்லை என்பதை உணரத் தொடங்கினேன்...''

''போதும்... போதும்...'' அலறினாள் அவள். ''இதற்குமேல் எதையும் தாங்கிக் கொள்ளும் சக்தி எனக்கு இல்லை. தயவு செய்து என்னை மன்னித்துவிடு...''

அனுதாபத்தோடு பார்த்தான் அவன்.

தேடி வந்த அந்த ரகசியப் போலீஸ் அதிகாரியைச் சோகத்தோடு பார்த்தான்.

மிகுந்த கோபத்தில் இருந்தார் அவர்.

''உண்மையைச் சொல்லு. எங்கே அவள்?''

''போய் விட்டாள்.''

''எங்கே?''

''தெரியாது. கண் காணாமல் எங்கேயோ போய்விட்டாள்.''

''துரோகி!''

''இல்லை. அவள் துரோகியே இல்லை.''

''எப்படிச் சொல்கிறாய்? உனக்கு என்ன தெரியும்?''

''எல்லாமே தெரியும்.''

''எல்லாமே என்றால்?''

''சட்டத்துக்குப் புறம்பாகச் சில கொலைகளைச் செய்தாள். பின்னர் சட்டத்தின் சார்பாகச் சில கொலைகளைச் செய்தாள். அதற்கும் இதற்கும் சரியாகப் போய் விட்டது. அவளை விட்டுவிடுங்கள்.''

''நீ என்ன சொல்கிறாய்?''

''உலகத்தைப் பொறுத்தவரையில் அவள் உயிரோடு இல்லை. அப்படியே விட்டு விடுங்கள். எங்கேயாவது போய், ஏதாவது பெயரில் ஒரு புதிய வாழ்க்கையை அமைத்துக் கொள்ளட்டும்.''

''முடியாது.''

''தயவு செய்து நான் சொல்வதைக் கேளுங்கள். நான் அவளை இழந்து விட்டேன். நீங்களும் இழந்து விடுங்கள்.''

''அது எப்படி முடியும்? சில ரகசிய தஸ்தாவேஜுகளையும் அல்லவா எடுத்துச் சென்று விட்டாள்?''

''இல்லை.'' சொல்லிவிட்டு மேசையின் இழுப்பறையிலிருந்து அவற்றை எடுத்துப் போட்டான். தொடர்ந்தான்.

''உங்களிடம் தரச் சொல்லி என்னிடம் கொடுத்து விட்டுத்தான் போனாள்.''

அவற்றை எடுத்துக் கொண்ட அந்தப் போலீஸ் அதிகாரி பெருமூச்சு விட்டார்.

— சி. ஆர். கே.

# சில்லறைப் பிரச்னை

தமிழினியன்

பஸ்ஸில் உட்கார இடம் பிடித்துக் கொண்டேன்.

எனக்குப் பிறகு முண்டியடித்து ஏறி, உட்கார இடம் கிடைக்காமலும், ஒருவரோடு ஒருவர் நெருக்கிக் கொண்டும் நின்ற பிரயாணிகள் என்னை அதிர்ஷ்டசாலியாய்ப் பார்த்தார்கள்.

அற்ப சந்தோஷம்தான். என்றாலும், பெருமையாக இருந்தது.

கண்டக்டர், கடல் நண்டு மாதிரி கூட்டத்தில் எங்கோ புதைந்து கொண்டு 'விசில்' அடித்தார்.

பஸ், குலுங்கிக் கொண்டு புறப்பட்டது.

காய்கறிப் பையை இடக்காலிலும், மளிகை மற்றும் எண்ணெய் அடங்கிய பிளாஸ்டிக் கூடையை வலக்காலிலும் அணைத்தபடி பாண்ட் பையைத் துழாவினேன்.

ஒரு ரூபாய் அகப்பட்டது.

டிக்கெட் ரூ. 1.25.

இன்னும் இருபத்தைந்து காசைத் தேடிப் பிடிக்க வேண்டும்.

கொத்துமல்லி வாங்கிய போது, இருபத்தைந்து காசு நாணயம் ஒன்றை மிச்சம் கொடுத்திருந்தாள், கிழவி.

அதை வாங்கும் போது பஸ் டிக்கெட் வாங்க இதைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று முன்னெச்சரிக்கையுடன் தீர்மானித்திருந்தேன்.

இதற்குப் போய் முன்னெச்சரிக்கையாவது, தீர்மானமாவது என்று ஆச்சரியமாய் இருக்கலாம். ஆனால், ரூ. 1.25 டிக்கெட்டுக்கு ரூ. 1.30 கொடுத்தால் கண்டக்டர் மீதி காசு தரமாட்டார் என்பது ஊரறிந்த உண்மை ஆயிற்றே!

மாரியம்மன் கோவிலுக்கருகில் ஒரு பள்ளம்.

பஸ் தூக்கிப் போட்டது.

சில்லறை துழாவும் சுவாரஸ்யத்தில் கைப்பிடிமானமோ, கால் படிமானமோ... ஏதோ ஒன்று நிதானம் இழக்க, அந்தர் பல்டி அடிக்காத குறையாய் முன் ஸீட்டுக்கு மேல் வளைக்கப்பட்டிருந்த குரோமியம் ராடில் மோதிக் கொண்டேன் நான். தலையில் 'ணங்...' என்று அடி.

"சார்... கவனம், சார்!" என்றார் பக்கத்திலிருந்தவர்.

நிமிர்ந்த என் நெற்றியைப் பார்த்துவிட்டு மேலும் அவர், "அடப்பாவமே பந்து மாதிரி புடைத்து விட்டதே" என்று அனுதாபப் பட்டார்.

எனக்கு வலி உயிர் போனது.

காட்டிக் கொள்ளாமல், "நம்மரோடு அந்த லட்சணத்திலே இருக்கிறது, சார்!" என்று முணுமுணுத்தேன்.

என்னால் அந்த நெற்றிப் புடைப்பைத் தொட்டுப் பார்க்கக் கூட முடியவில்லை.

இடது கை காய்கறிப் பையிலும், வலது கை பாண்ட் பையிலும் இருந்தனவே. இருந்தும் —

பிரயோசனம்?

பத்து, இருபது காசுகளாகத்தான் திரும்பத் திரும்ப அகப்பட்டனவே தவிர, இருபத்தைந்து காசு நாணயத்தைக் காணவே காணோம்.

"டிக்கெட்... டிக்கெட்..." என்னும் கண்டக்டரின் குரல் நெருங்கிக் கொண்டிருந்தது.

பால் பண்ணைச் சதுக்கத்தில் ஒரு திடீர் பிரேக்.



குறுக்கே வந்த லாரிக்கு இடம் ஒதுக்கிக் கொடுத்தாராம், டிரைவர். கர்மம்... கர்மம்...

நின்று கொண்டிருந்த பிரயாணிகள் நிலை குலைய, என் காய்கறிப் பை சாய்ந்து மேலாக இருந்த தக்காளிப் பழங்கள் உருண்டோடின.

செக்குலக்கை தெரிசலையும் பொருட்படுத்தாமல் அவசரமாக அப்பழங்களைப் பொறுக்கக் குனிந்தேன், நான்.

அதற்குள், அத்தனை பழங்களும் பிரயாணிகளின் காலுக்கடியில் 'பாத'ரசமாகி விட்டன.

பெங்களூர் தக்காளி. கிலோ ஏழு ரூபாய்!

இதற்கெல்லாம் காரணம், இந்த கண்டக்டர்கள்.

இவர்கள் பிரயாணிகளுக்கு மீதிக் காசை முறையாகக் கொடுப்பவர்களாய் இருந்தால் இப்படிக் கஷ்டமும், நஷ்டமும் ஏற்பட்டிருக்குமோ, எனக்கு.

''டிக்கெட்... டிக்கெட்...''

பித்தளை ஊதலால் தட்டிக் கொண்டே வந்த அந்தக் காக்கி உருவத்தைப் பார்க்கவே எரிச்சலாக இருந்தது.

பாழாய்ப் போன அந்த இருபத்தைந்து காசு நாணயம் வேறு கையில் அகப்படாமல் 'பாச்சா' காட்டியது.

சரி.

ரூ. 1.30 கொடுத்தால்தானே ஐந்து காசு பிரச்னை. அப்படி வேண்டாம். ரூ. 1.50 கொடுக்கலாம். மீதி இருபத்தைந்து காசு வாங்க வசதியாய் இருக்கும்' என்று அது போல் கொடுத்தேன்.

''ஒரு – ஒண்ணு இருபத்தைந்து கொடுங்கள்...''

டிக்கெட்டையும், மீதிச் சில்லறையையும் கையில் திணித்தார், கண்டக்டர்.

பார்த்தேன்.

முப்பது காசு மீதமிருந்தது.

ஒரு ரூபாய் இருபது காசுக்கு ஒரு 'ஸ்டேஜ்' உண்டு. அந்த டிக்கெட்டைக் கொடுத்திருப்பாரோ என்ற சந்தேகத்துடன் டிக்கெட்டைக் கவனித்தேன்.

நான் கேட்ட ஒண்ணு – இருபத்தைந்து டிக்கெட்தான், உடனே.

''கண்டக்டர்... நான் வாங்கியது ஒண்ணு – இருபத்தஞ்சு டிக்கெட்'' என்றேன், நான்.

''தெரியும், சார்'' என்று சிரித்தார், கண்டக்டர்.''கூட்டத்திலேஇருபத்தைந்துகாசைத் தேடிக் கொண்டிருக்க முடியுமா, சார். ஏதோ... கையில் வந்த சில்லறை அவ்வளவு தான். ஐந்து காசை நீங்கள் சாப்பிட்டால் என்ன...? நான் சாப்பிட்டால் என்ன...?''

உண்மைதான்.

அல்ப ஐந்து காசு... யார் விட்டுக் கொடுத்தால் என்ன?

இது புரியாமல், நெற்றியில் அடி, தக்காளி நாசம். சை...!



• பாக்யராஜ் வீட்டில் பஸ்!

# சென்னை நேரில் நட்சத்திர வீடே பிரதானம்

"அண்ணா சமாதி, எம்.ஜி.ஆர். சமாதி, வள்ளுவர் கோட்டம் பார்த்துவிட்டு, பாக்ய ராஜ், ராஜேந்தர், கமல், ரஜினி, விஜய் காந்த் ஆகியோர் வீடுகளைப் பார்த்து விட்டுத் திரும்பலாம்' என்று விளம்பரம் செய்தால்தான் கிராமங்களிலும் சின்ன ஊர்களிலும் 'டூரு'க்கு ஆள் சேர்க்க முடியு துங்க" என்றார் ஒரு சுற்றுலா ஏஜெண்ட்.

சில நடிகர்கள் வீட்டுக்குப் போய்ப் பார்த்தபோது அந்த ஏஜெண்ட் சொன்ன உண்மையின் முழுப் பரிமாணம் புரிந்தது!

■ வள்ளுவர் கோட்டத்துக்கு வரும் பெரும் பாலான டூரிஸ்ட்டுகள் அருகிலுள்ள பாக்கியராஜைப் பார்க்காமல் திரும்புவ தில்லை. சில நேரங்களில் பஸ்ஸையே அவர் வீட்டு வாசலில் கொண்டு நிறுத்தி விடுகிறார்கள். கோவை மாவட்டத்திலிருந்து வரும் குழுவாக இருந்தால் பாக்யராஜ் வீட்டைக் குறிவைத்துத்தான் வருகிறது! வள்ளுவர் கோட்டம் இரண்டாம் பட்சம் தான்! பாக்யராஜும் வாசலுக்கு வந்து 'தரி சனம்' தருகிறார். வயதான அம்மாக்கள் அவர் கன்னத்தை வழித்துத் திருஷ்டி கழிக் கிறார்கள்; திருநீறு இட்டு ஆசி கூறுகிறார் கள்!

■ தி. நகர், ராஜாபாதர் தெருவிலுள்ள விஜய்காந்த் வீட்டில் முறையிட்டு, உதவி கோரும் கூட்டம். "நான் ஆப்பக் கடை வைக்கப் போறேன்", "மகன் அடிச்சுத் துரத்திட்டான்." என்று புலம்பும் பெண்கள். "ஆலையில் வேலை பார்த்தேன், கையு டைஞ்சு போச்சு" என்று வருந்தும் ஆண்கள்... இவர்களுக்கிடையே விஜய் காந்துடன் சேர்ந்து போட்டோ எடுத்துக் கொள்ளத் துடிக்கும் இளைஞர்கள்.

விஜய்காந்த் அலுவலகம் இட்லி சட்டி, ஆப்பை சட்டி என்று பொருள்களாகவே வாங்கிக் கொடுத்துக் கூட்டத்தைச் சமா தானப்படுத்துகிறது. 'வழி தவறி வந்துட் டேன்' என்று தலை சொறிபவர்களுக்குப் பணம் தராமல் ஊர் திரும்ப டிக்கெட்டே வாங்கித் தந்துவிடுகிறார்கள்! போட்டோ எடுத்துக் கொள்ள மோதும் கும்பலுக்கு 'டோக்கன்' கொடுத்து வரிசைப்படி அனு மதிக்கிறார்கள்! வாசலில் நிற்கும் போட் டோகிராபர்கள் ஊருக்குப் படம் அனுப்புவ தாகச் சொல்லி விலாசத்துடன் பத்து ரூபாய்ப் பணத்தையும் பெற்றுக் கொண்டு 'கிளிக்'கித் தள்ளுகிறார்கள்!

• விஜய்காந்துக்குத் திருஷ்டி கழிக்கும் ரசிகர்கள்!

■ ரஜினிகாந்த் வீட்டிலும் போட்டோ எடுக்க இதே டெக்னிக் தான். ஆனால் இன்னும் விரைவாக வேலை நடக்கிறது! திருப்பதியில் பெருமாளைப் பார்க்கக்கூட இன்னும் கொஞ்சம் கூடுதல் நேரம் கிடைக் கும் போலிருக்கிறது! வயதுப் பெண்களும் ரஜினியுடன் தோள் உரசப் படம் பிடித்துக் கொள்கிறார்கள். அம்மாக்கள் குழந்தை களை விட்டு ஆட்டோகிராப் வாங்கச் செய் கிறார்கள். காம்பவுண்ட் சுவர் மேலெல் லாம் இளைஞர்கள் நின்று கொண்டிருக் கிறார்கள். சிறு பையன்கள் உற்சாகம் தாளாமல் கையையும் காலையும் உதறிக் கொண்டு குதிக்கிறார்கள்!

■ டி. ராஜேந்தர் வீட்டுக்கு வருவோர் எலு மிச்சம்பழமோ மலர் மாலையோ கொண்டு வருகிறார்கள். கொஞ்சம் கூட்டம் சேர்ந்த தும் டி. ஆருக்குத் தகவல் தெரிவிக்கப்பட, அவர் தம் அலுவலக அறை வாசலில் நின்று காட்சி தருகிறார்.

■ ஆந்திராவிலிருந்து வரும் சுற்றுலாப் பயணிகள் அதிகாலை நேரத்தில் உஸ்மான் ரோடு பக்கம் 'சிரஞ்சீவி இல்லு எக்கட உன்னாய்...?' 'அர்ஜுன் இல்லு எக்கட உன்னாய்?' என்றபடி மேலும் கீழும் அலை வதைப் பார்க்கலாம்.

ஆந்திரரானாலும் சரி, தமிழ்நாட்டவ ரானாலும் சரி, அவர்கள் வரும் வேளை யில் நடிகர்கள் இல்லா விட்டால் கூட அவர்களது வீட்டையாவது கண்ணால் பார்த்துவிட்டுப் போனால்தான் திருப்தி!

— எஸ். பாலு.

படங்கள்: சித்ரா.



# கிரிக்கெட்–

# நன்னடத்தை விதிகள் தேவைதானா?



யாரேனும் நியாயத்துக்குப் புறம்பாக நடந்து கொண்டால், 'That's not Cricket!' என்று ஆங்கிலத்தில் விமர்சிப்பதுண்டு. ஆனால், இன்றோ, அந்தக் 'கனவான்களின் ஆட்டத்துக்கு' (gentlemen's game) புதிய நன்னடத்தை விதிகளை உருவாக்கும் நிலை ஏற்பட்டிருக்கிறது! சர்வதேச கிரிக்கெட் பந்தயங்களில் ஆடுவோரெல்லாம் International Cricket Council வகுக்கப் போகும் இந்த நன்னடத்தை விதிகளுக்கு உட்பட்டே நடந்து கொள்ள வேண்டும்.

புதிய விதிகளுக்கு அவசியம் உள்ளதா?... ஸ்ரீகாந்திடம்—கருத்துக் கேட்டபோது சொன்னார்:

"இவ்வளவு வருடங்களாகக் கிரிக்கெட் விளையாடி வரும் நாங்கள் எழுதப்படாத நன்னடத்தை விதிகளைக் கடைப்பிடித்துத்தான் வருகிறோம். நாங்கள் தவறாக நடந்து கொண்டதாகப் பெரிய புகார்கள் எதுவும் கிடையாது.

"எதிர்காலத்தில் பிரச்னைகள் ஏதும் எழக்கூடாது என்று முன்னெச்சரிக்கையாக ஐ. சி. சி. இந்த நடவடிக்கையை எடுத்திருக்கலாம். முன்னெப்போதைக்காட்டிலும் அதிகமாகக் கிரிக்கெட் இப்போது ஆடப்பட்டு வருகிறது; கிரிக்கெட் மூலம் சம்பாதிக்கக்கூடிய பணத்தின் அளவும் பல மடங்கு அதிகரித்து விட்டது. இதனால் ஆட்டத்தின் மீது உண்மையான அபிமானம் குறைந்து, போட்டி அதிகமாகிப் பிரச்னைகள் வரும் என்று எதிர்பார்க்கிறார்கள் போலும். உதாரணமாக, டென்னிஸில், விளம்பரதாரர்களிடம் ஒப்பந்தம் செய்து கொண்டு, விளையாடும் போது கூட சீருடையில் விளம்பர ஸ்டிக்கர்கள் அணிந்து கொள்வது வழக்கமாகி விட்டது. இதைப் போன்ற 'சம்பாதிக்கும் முறைகள்' கிரிக்கெட்டில் புகக் கூடாது என்று ஐ. சி. சி. எண்ணியிருக்கலாம்...

"பொருளாதார விஷயத்தில் மட்டுமின்றி, கிரிக்கெட் வீரர்கள் பொதுவாகவே கண்ணியக் குறைவாக நடந்து கொள்வதையும், நிர்வாகத்தை எதிர்த்துப் பத்திரிகைகளில் எழுதுவதையும் பேட்டி அளிப்பதையும் தவிர்க்கும் நோக்கம் ஐ. சி. சி. யிடம் இருப்பதாக நீங்கள் கருதவில்லையா?"

அவ்வாறு யாரும் நடந்து கொண்டதாக எனக்குத் தெரியவில்லை. ஒரே ஒருமுறை நான் காப்டனாக இருந்த போது

(பாகிஸ்தானுக்கு எதிரான தொடர்) சிறிது குழப்பம் ஏற்பட்டது. காப்டன் என்ற முறையில் அணியின் சார்பாக நான் பேச வேண்டியிருந்தது. அப்போதும் நான் நிர்வாகத்தைத் தாக்கிப் பேசவில்லை...''

''அந்த சம்பவத்தைத் தொடர்ந்து இந்திய கிரிக்கெட் கன்ட்ரோல் போர்ட் கொடுத்த சன்மானத்தை நிராகரித்த உங்கள் அணி, தனியாரிடம் பணம் வாங்கிக் கொண்டு பாக் பிரயாணத்தை மேற்கொண்டதாகச் சொல்லப்படுகிறதே...''

''அது உண்மையல்ல. நாங்கள் யாரிடமும் பணம் வாங்கவில்லை. பாகிஸ்தானில் நன்றாகவே விளையாடினோம். ஆட்டக்காரர்கள்தான் முக்கியம் என்றோ; நிர்வாகம்தான் முக்கியம் என்றோ நினைக்காமல் ஒருவருக்கொருவர் ஒத்துழைத்துச் செயல்பட்டால் புதிய விதிகள் எதுவும் தேவைப்படாது.''

''அம்பயர்களைப் பற்றி ஏராளமான புகார்கள் வருகின்றனவே. நன்னடத்தை விதிகளுடன் neutral umpireகள் நியமனம் பற்றியும் ஐ. சி. சி. யோசித்து வருகிறது. இது பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

''ஒரு விளையாட்டில் தீவிரமாக ஈடுபடும்போது நமக்கு எதிராகத் தவறான தீர்ப்பு அளிக்கப்பட்டால் மனம் குமுறுவது சகஜம்தானே? ஆனால் அதற்காக யாரும் அம்பயரிடம் வஞ்சம் தீர்க்கப் போவதில்லை. அம்பயரும் ஒரு மனிதர்தானே? அவரும் தவறுகள் செய்யக்கூடும். விளையாட்டின் தீவிரம் அடங்கி, யோசிக்கும் போது இது புரியும். நியூட்ரல் அம்பயர் நியமித்தால் அவரும் தவறு இழைக்கக் கூடும் அல்லவா? எனவே இந்த விஷயங்களைப் பெரிதுபடுத்தாமல் விட்டு விடுவதுதான் நல்லது.

''பொதுவாகவே, புகார் செய்யும் பழக்கமும், பிறர் மீது பழி சுமத்தும் பழக்கமும் நம்மிடையே உள்ளது. அம்பயர் சரியில்லை, பிட்ச் சரியில்லை, காப்டன் சரியில்லை, ஏன் டிரெஸ்ஸிங் ரூம் சரியில்லை என்று கூட புகார் செய்யலாம்! ஆனால் இதையெல்லாம் விட்டு விட்டு ஆட்டத்தை எப்படிக் களிப்பூட்டும் விதமாக மேம்படுத்த முடியும் என்று பார்ப்பதே முக்கியம். கிரிக்கெட்டில் பெயரும் பணமும் வருகிறதென்றால் அதற்குப் பார்வையாளர்களின் ஆதரவுதான் காரணம். அவர்களுக்குத் திருப்தி தரும் வகையில் ஆட்டம் அமைய வேண்டும். நிர்வாகமும் சரி, ஆட்டக்காரர்களும் சரி, சின்ன விஷயங்களைப் பெரிதுபடுத்தாமல் விடுவதன் மூலம் ஆட்டத்தில் அதிக கவனம் செலுத்த முடியும்'' என்று முடித்தார் ஸ்ரீகாந்த்.

**இந்தியப் பெண்கள் கிரிக்கெட் அசோசியேஷன் துணைத் தலைவி திருமதி ஷீலா ரங்கநாதனிடம்** ஐ. சி. சி. யின் புதிய நடவடிக்கை குறித்துக் கேட்ட போது சொன்னார்:

''இங்கிலாந்து அணி ஒருமுறை இந்தியாவுக்கு வந்து ஒரு சீரிஸ் விளையாடிச் சென்றால், அதன் மூலம் கிடைக்கும் லாபத்தைக் கொண்டு, ஐந்து வருடங்களுக்கு அவர்களுடைய கவுண்டி கிரிக்கெட் பந்தயங்களை நடத்த முடிகிறதாம். நம் நாட்டில் கிரிக்கெட்டுக்கு அந்த அளவுக்கு மக்கள் ஆதரவும் பொருளாதார லாபமும் கிடைக்கிறது! செய்தித்தாள்களில் கிரிக்கெட் செய்திக்கு ஒதுக்கப்படும் இடத்தின் அளவும் இந்த ஆட்டத்தின் பிராபல்யத்துக்கு மற்றொரு சான்று.

''இதே காரணங்களால்; இந்த விளையாட்டில் ஈடுபடும் வீரர்கள் ஒவ்வொரு நிமிடமும் தங்கள் திறமையை நிரூபித்துக் கொண்டேயிருக்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளாகிறார்கள். அவர்களுடைய தனிப்பட்ட வாழ்க்கையும் அதிக கவனத்தை ஈர்க்கிறது. மைக் காட்டிங் ஒரு முறை தமது ஹோட்டல் அறையில் ஒரு பெண்ணுடன் மது அருந்திக் கொண்டிருந்ததாகச் செய்தி வந்தது. ஆட்டத்தின் 'tension' அதிகமாகி விட்டதால் அதைத் தணிக்கவே தாம் அவ்வாறு செய்ததாகக் காரணம் கூறினார் அவர்!

''ஒரு முந்நாள் இந்தியக் காப்டன், முன்னணி பாட்ஸ்மன் ஒருவர் டெஸ்ட் மாட்ச் சமயத்தில் இரவு வெகு தாமதமாக அறைக்குத் திரும்பியதைத் தட்டிக் கேட்டாராம். அந்த ஆட்டக்காரர் 'நீங்கள்



எப்போது திரும்பினீர்கள்? நான் தாமதமாக வந்தது உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டுமெனில் நீங்களும் தாமதமாகத் தான் வந்திருக்க வேண்டும்!' என்று பதில் சொன்னதாகவும், அதன் பிறகு அவர் இந்தியாவுக்கு ஆடவேயில்லை என்றும் ஒரு வரலாறு உண்டு!

''இதைப் போன்ற சம்பவங்கள் தற்காலத்தில் அதிகம் நிகழ்வதில்லை என்றே சொல்ல வேண்டும். காரணம், கிரிக்கெட் ஒரு விளையாட்டாக இருந்த நிலை மாறி ஒரு தொழிலாக மாறியுள்ளது. அதனால் எல்லோருமே ஆட்டத்தை சீரியஸாக எடுத்துக் கொள்கிறார்கள். ஆனால் விளையாட்டு தொழிலாக மாறியிருப்பதால் அந்தத் தொழிலுக்கென்று ஒரு தர்மம் — நியதி — வகுக்கப்பட வேண்டியது மிகவும் அவசியமாகி விட்டது. டாக்டர்களுக்கும் வக்கீல்களுக்கும் தொழில் தர்மம் இல்லையா, அதைப் போலத்தான்.

''முக்கால்வாசிப் பிரச்னைகளுக்குப் பணமே காரணம். பணம் கண்ணை மறைப்பதால் அடிப்படைக் கோட்பாடுகள் மறந்து போகின்றன. ஷார்ஜாவில் நடக்கும் உலகக் கோப்பை பந்தயம் ஒரு யுத்தம் போல் அல்லவா கருதப்படுகிறது! விம்பிள்டன் டென்னிஸ் பந்தயங்களில் ஆரம்பத்தில் அமெச்சூர்கள் மட்டுமே ஆட அனுமதிக்கப்பட்டார்கள். ஆனால் சில போலி அமெச்சூர்கள் தங்கள் ஆட்டத் திறன் அந்தஸ்தினால் நிறையப் பொருளாதார லாபங்களை அடைந்தார்கள். இதை உணர்ந்த பிறகு விம்பிள்டன் தொழில் ரீதியான ஆட்டக்காரர்களுக்குரிய பந்தயமாக மாற்றப்பட்டது.

''கிரிக்கெட்டிலும், பணத்தினால் ஆட்டம் சீரழிந்து போகும் ஆபத்து இப்போது நிறையவே இருக்கிறது. குறிப்பாக இளம் ஆட்டக்காரர்கள் எடுத்த எடுப்பிலேயே, போதையூட்டும் பரிமாணத்தில் பணத்தைப் பார்க்கும் போது நிலை தவறி விடும் வாய்ப்புக்கள் அதிகம். ஒரு பெக்கருக்கு ஏற்பட்ட வருந்தத்தக்க நிகழ்ச்சிகள் ஒரு சச்சின் டெண்டுல்கருக்கு நிகழக் கூடாது....

''மேலும், எப்போது பார்த்தாலும் செய்தித்தாள்களில் கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்கும் கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டுக்கும் இடையே தகராறு, வேறுபாடு என்றே செய்திகள் வருகின்றன.

''இதையெல்லாம் காண்கையில் ஐ. சி. சி. யின் நன்னடத்தை விதிகளை வரவேற்கலாம் என்றே நினைக்கிறேன். ஆனால் ஒன்று... பெண்கள் கிரிக்கெட் அணிக்கு இத்தகைய நன்னடத்தை விதிகளை நாங்கள் வலியுறுத்தித்தான் வருகிறோம். ஆனால் சில பெண்கள் அதையும் மீறி, தனிப்பட்ட முறையில் செய்தித்தாள்களில் புகார் பேட்டிகள் தருவது போன்ற நடவடிக்கைகளில் ஈடுபட்டுக் கொண்டு தான் வருகிறார்கள்! இந்தக் கதி சர்வதேச கிரிக்கெட்டுக்குப் புகுத்தப்படவிருக்கும் புதிய விதிகளுக்கும் நேர்ந்து விடக் கூடாது. கண்டிப்புடன் அமுல்படுத்தப்படக்கூடிய வகையில் அவை அமைக்கப்பட வேண்டும். இது சாத்தியமில்லை என்றால் சும்மா இருந்து விடுவதே மேல்!''

தொகுப்பு: **குண்டுமணி.**
வண்ணப்படங்கள்: **யோகா.**

**யூரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்திலிருந்து வரும் நண்பர், உங்கள் வீட்டிலுள்ள தூசையும் அழுக்கையும் மிக எளிதாக அகற்றும் வழியை செய்து காட்டப் போகிறார்.**

வரும் நாட்கள் எதேனும் ஒன்றில் யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டுக் கதவைத் தட்டி, அடையாளச் சீட்டுடன் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்வார்.

அவர் பேச்சில் தன்னம்பிக்கை தொனிக்கும் — இதில் வியப்பேதும் இல்லை. ஏனெனில், இவர் இந்தியாவிலேயே இது போன்ற நிறுவனங்களில் மிகப் பெரியதும் வெற்றிவாகை சூடியதுமாகிய விற்பனை நிறுவனத்தின் அங்கத்தினர் ஆவார். இந்நிறுவனம் விற்பனைக்குப்பின் நம்பகமான சேவை புரியும் பின்னணி கொண்டது.

தூசு, சூழ்நிலை அசுத்தம், அசுத்தமான நீர் மற்றும் வீட்டு வேலைகளில் உதவியின்மை போன்ற இன்றைய பிரச்சினைகளை சமாளிப்பதற்கென நவீன வீட்டுபயோக சாதனங்களை அவர் உங்களுக்கு அறிமுகப்படுத்துவார்.



செயல்முறை விளக்கத்திற்கு இவரிடம் இரண்டு இணையற்ற தயாரிப்புகள் உள்ளன. யூரோக்ளீன்: அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம். இது வேக்யூம் கிளீனரை விடச் சிறந்தது. மற்றும் அக்வாகார்ட்: நீர் பைப்பில் பொருத்தக்கூடிய வாட்டர் ஃபில்டர் கம்-ப்யூரிஃபையர்.

**யூரோக்ளீன்:** உங்கள் வீட்டில் உள்ள தூசு மற்றும் சிறு துரும்புகளையும்கூட சிரமமின்றி எளிதில் அகற்றுகிறது. கண்ணிற்கு புலப்படாத தூசுகள்கூட அகன்றுவிடும். **அக்வாகார்ட்:** ஒரு ஸ்விட்சை இயக்கி, குழாயைத் திறந்தால் கிருமிகள் அற்ற, பாதுகாப்பான சுத்தமான குடிநீரை உங்கள் குழாயிலேயே நீங்கள் பெறலாம்.



உங்கள் குடும்பத்திற்கு சுத்தம் மற்றும் சுகாதாரத்திற்கான நவீன முறைகளை இத்தயாரிப்புகள் எவ்விதம் வழங்குகின்றன என்பதை யூரேகா ஃபோர்ப்ஸ் சேல்ஸ்மேன் உங்கள் வீட்டிலேயே உபயோகித்து விளக்குவார். அதன் மூலம் உங்களைச் சுற்றிலும் சுத்தமும், சுகாதாரமும் நிறைந்த உலகம் உருவாகும்.

**அவர் உங்கள் வீட்டிற்கு வரும் நாள்வரை நீங்கள் காத்திருக்க வேண்டாம். விரைவில் வருகை புரிய கீழ்க்காணும் யூரேகா ஃபோர்ப்ஸ் அலுவலகங்கள் எதேனும் ஒன்றில் தொடர்பு கொள்ளுங்கள். அல்லது இம்முகவரிக்கு எழுதுங்கள்: யூரேகா ஃபோர்ப்ஸ், லிமிடெட், பி.ஒ. பாக்ஸ் 936, ஜி.பி.ஒ. பம்பாய்-400 001.**



| யூரோக்ளீன் | அக்வாகார்ட் | யூரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட் |
|---|---|---|
| அனைத்துபயோக சுத்தம் செய்யும் சாதனம் — வேக்யூம் கிளீனரை விடச் சிறந்தது | நீர் பைப்பில் பொருத்தக் கூடிய வாட்டர் ஃபில்டர் கம் ப்யூரிஃபையர் | நவீன முறை சுத்தம் சுகாதாரத்தின் முன்னோடிகள். |

89/EFL/188 R 2-tm

# மச்சானின் திருமணம்

கதிஜா கத்தினாள். "கண்டிப்பாக மச்சான் கல்யாணத்துக்கு நாம் போகத்தான் வேண்டும்."

"கொஞ்சமாவது சூடு சுரணை இருந்தால் நீ இப்படிப் பேசுவியா! அடம்பிடிப்பியா!"

"மாமா செய்த தப்புக்கு மச்சான் என்னம்மா செய்யும்?"

"மாமாவாம் மாமா. அவன் எனக்குத் தம்பியா?"

"மாமாவைக் குறை சொல்லியும் பிரயோ ஜனம் இல்லை. மாமாதான் மாமியின் கைப் பாவை ஆயிட்டாரே!"

"பெரிய மாமி. அவ என்ன சீமான் வீட்டுக்காரியா? அவளும் நம்மைப்போல் வக்கத்தவள் தானே! இப்ப நாலு காசு கையிலே சேர்ந்தவுடனே இப்படித் துள்ளிக் குதிக்கிறாளே!"

"மாமி தப்பு செய்வதாகவே இருக்கட்டும். அதற்காக நாமும் அவளைப்போல் நடக்க வேண்டுமா?"

"மாமா மாமியை விட்டுத்தள்ளு. உன் ஆசை மச்சான் மஸ்தானுக்குப் புத்தி எங்கே போச்சு? நாம் செய்த உதவியைக் கொஞ்ச மாவது நினைச்சுப் பார்த்தானா?"

"செய்த உதவியைச் சொல்லிக்காட்டு வது நல்லது இல்லை அம்மா..." — கதிஜா வேதாந்தம் பேசினாள்.

"பெரிய மனுஷி! எனக்குப் புத்தி சொல்ல வந்துட்டா!"

அம்மாவுக்கும் மகளுக்கும் வாக்குவாதம் தொடர்ந்தது. முடிந்தபாடில்லை.

விடிந்தால் மஸ்தானுக்குக் கல்யாணம். பெரிய இடத்திலே பெண். நூறு பவுனுக்கு நகை. ஐம்பது ஆயிரம் ரொக்கம். இன்னும் வகைவகையாய்ச் சீர்வரிசைகள்!

இதையெல்லாம் விட்டுவிட்டுச் சாதாரண நிலையில் உள்ள கதிஜாவை முறைப் பெண் என்ற காரணத்திற்காக 'நிக்காஹ்' செய்ய மஸ்தானின் அம்மா ஆயிஷா பீவி சம்மதிக்கவில்லை. பிரியப்படவும் இல்லை.

கதிஜா, பாத்திமா பீவிக்கு ஒரே பெண். கணவனை இழந்த நிலையிலும் தன் ஒரே மகள் கதிஜாவைச் செல்லமாகவே வளர்த்து ஆளாக்கினாள் பாத்திமா பீவி.

பாத்திமா பீவியின் கணவர் கரீம் இரா வுத்தர் ரொம்ப ஏழையும் அல்ல. பெரிய பணக்காரரும் அல்ல. அவர் இறக்கும் பொழுது ஒரு வீடு, கொஞ்சம் நிலபுலன்கள், ஓரளவுக்கு நகை நட்டுக்களையும் வைத்து விட்டுத்தான் இறந்தார்.

நிலத்திலிருந்து வரும் வருமானத்தைக் கொண்டு தாயும் மகளும் மிகவும் செட்டாக வாழ்க்கை நடத்தி வந்தார்கள்.

ஹமீது இராவுத்தர் பாத்திமா பீவிக்கு ஒரே தம்பி. அவரும் பாத்திமா பீவியைப் போல் சாதாரண வாழ்க்கை நிலையில்தான் இருந்தார். மஸ்தான் அவருக்கு ஒரே மகன். சிறு வயது முதல் மஸ்தானும் கதிஜாவும் அன்பாகவே பழகி வந்தார்கள்.

கதிஜா பெரிய மனுஷி ஆனாள். "மஸ் தானுக்குப் பெண் தயார் ஆகிவிட்டாள்" என்று அனைவரும் பேசிக்கொண்டார்கள்.

கதிஜாவுக்கு மச்சான் மஸ்தான் மீது கொள்ளை ஆசை. மஸ்தானும் கதிஜா மீது தன் உயிரையே வைத்திருந்தான்.

பாத்திமா பீவியும் தன் தம்பி மகன் மீது



கே.எம்.எஸ்.தாவூத்

மிகவும் பாசமாக இருந்தாள். கதிஜாவை அவன் கையில் பிடித்துக் கொடுத்துவிட்டால் நிம்மதியாகக் கண்ணை மூடலாம். தன் கடமை முடிந்துவிடும் என்ற கற்பனையில் மிதந்தாள்.

**வ**ருடங்கள் சென்றன. மஸ்தான் எம்.பி.ஏ. முடித்துவிட்டான். பல கம்பெனிகளுக்கும் வேலைக்காக அப்ளிகேஷன் போட்டான். பம்பாயில் பிரபல கம்பெனி ஒன்றிலிருந்து அழைப்பு வந்தது. மஸ்தான் போய் வந்தான்.

"பத்தாயிரம் ரூபாய் டெப்பாசிட் கட்டினால் உடனே வேலைக்கு உத்தரவு கிடைத்துவிடும். மாதம் மூவாயிரம் ரூபாய் சம்பளம். ஆபீசர் வேலை," — மஸ்தான் தன் அப்பா ஹமீது இராவுத்தரிடம் பம்பாய் வேலை பற்றிச் சொன்னான்.

ஹமீது இராவுத்தர் பத்தாயிரம் ரூபாய்க்கு எங்கே போவார்? குழம்பினார். பணத்துக்காகத் தத்தளித்தார்.

பாத்திமா பீவியும் கதிஜாவும் இதைக் கேள்விப் பட்டார்கள். கதிஜா தன் கழுத்தில் கிடந்த ஒரே தங்கச் சங்கிலியை விற்றுப் பத்தாயிரம் ரூபாயை மச்சான் வேலைக்காகக் கொடுக்கத் தயாரானாள். பாத்திமா பீவியும் இதற்குத் தடை சொல்லவில்லை.

தம்பியையும் மருமகனையும் தன் வீட்டிற்கு அழைத்துக் கதிஜாவின் கழுத்தில் தொங்கிய சங்கிலியைக் கழற்றித் தம்பியிடம் கொடுத்தாள் பாத்திமா பீவி.

"இதை விற்றால் பத்தாயிரம் ரூபாய் தேறும். அதைக் கொண்டு வேலையில் சேர ஏற்பாடு செய்" என்று தம்பியிடம் கனிவோடு கூறினாள் பாத்திமா பீவி.

ஹமீது இராவுத்தரும் மஸ்தானும் நன்றிப் பெருக்கோடு அதைப்பெற்றுக்கொண்டார்கள். பணம் தயார் செய்யப்பட்டது. டெப்பாசிட் கட்டி வேலையிலும் மஸ்தான் சேர்ந்து விட்டான்.

மாமிக்குத் தவறாமல் கடிதங்கள் எழுதினான் மஸ்தான். கடிதங்களில் கதிஜாவைப் பற்றித்தான் நிறைய விஷயங்கள் கேட்டு எழுதி இருந்தான். கடிதங்களை ஆவலோடு படித்த கதிஜா, காதல் உலகில் வலம் வந்தாள்.

**வ**ருடம் ஒன்று சென்றது. மஸ்தான் இரண்டு வார விடுமுறையில் ஊருக்கு வந்தான். ஆசையும் ஆவலுமாக மாமி வீட்டுக்குச் சென்றான். நலம் விசாரித்தான். கதிஜா வெட்கத்தால் மச்சான் கண்ணில் படாமல் மறைந்து கொண்டாள். மறைந்திருந்து மச்சானைப் பார்ப்பதில் இன்பம் கண்டாள்.

"அடுத்த தடவை ஊருக்கு வரும் பொழுது தகுந்த பணத்தோடு வருகிறேன். கதிஜாவுக்குத் தங்கச் சங்கிலி செய்து விடலாம்" மாமியிடம் மகிழ்ச்சியோடு கூறினான் மஸ்தான். மறைந்திருந்த கதிஜாவுக்கும் நன்றாகக் கேட்டது.

"பணமும் தங்கச் சங்கிலியுமா பெரிசு. மச்சான் மீது கொண்ட ஆசையினால்தானே அன்று என் தங்கச் சங்கிலியைக் கொடுத்தேன்..." — கதிஜா மனம் மகிழ்ந்து கூறினாள்.

**ம**ஸ்தான் விடுமுறை முடிந்து பம்பாய் சென்றுவிட்டான். மகன் சம்பாத்தியத்தில் ஹமீது இராவுத்தரின் அந்தஸ்து உயர்ந்தது.

இப்போது நாலாயிரம் ரூபாய் மாதச் சம்பளம். இன்னும் கூடும். ஆபீசர் வேலை. பணக்காரர்கள் சும்மா இருப்பார்களா? மஸ்தானுக்குப் பெண் கொடுக்கப் படை எடுத்தார்கள்.

மஸ்தானின் அம்மா பழைய வாழ்க்



# மாதம் ஒரு தொகுதி

**கோயமுத்தூர் (கிழக்கு)
எம். எல். ஏ. என்ன செய்கிறார்?**

கடந்த 77 ஆம் ஆண்டிலிருந்தே தொடர்ந்து எம். எல். ஏ. வாக இருப்பவர் மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த கே. ரமணி. முழு நேரமும் தொழிற்சங்கப் பணியிலேயே ஈடுபட்டிருக்கும் இவர், கோயமுத்தூர் (கிழக்கு)த் தொகுதியில் போட்டியிட்ட இ. காங்கிரஸ் வேட்பாளரை 12,125 வாக்குகள் வித்தியாசத்தில் தோல்வியடையச் செய்தவர்.

அரசியல் அனுபவம் மிக்க இவர், தமது தொகுதியான கோயமுத்தூர் (கிழக்கு)க்கு என்னென்ன செய்திருக்கிறார்? 'மாதம் ஒரு தொகுதி' என்ற கல்கியின் திட்டத்தின் கீழ் நடந்த பதின்மூன்றாவது குலுக்கலில் தேர்ந்தெடுக்கப்பட்ட தொகுதி, கோயமுத்தூர் (கிழக்கு)தான் என்பதால் நேரடியாக வந்து ஆராயப் போகிறோம்.

எனவே, கோயமுத்தூர் (கிழக்கு) தொகுதியிலுள்ள அனைவரும், தங்கள் எம். எல். ஏ. வான கே. ரமணி செய்த சாதனைகள் பற்றியும், செய்யத் தவறிய பணிகள் பற்றியும் — குறை நிறைகள் பற்றியும் எங்களுக்கு எழுதியனுப்ப வேண்டுகிறோம்.

நீங்கள் அனுப்பும் தகவல்களை நேரில் வந்து ஆராய்ந்து, பிரச்னைகளை அலசிப் பார்த்து, உங்கள் சார்பாகக் கே. ரமணியிடம் நாங்கள் கேள்விகள் கேட்கிறோம். அவற்றையெல்லாம் கல்கியில் கட்டுரையாக வெளியிடுகிறோம்.

**உங்கள் கடிதங்கள் கல்கி அலுவலகத்துக்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 16.2.91.**

'மாதம் ஒரு தொகுதி' என்று உறையின் மேல் குறிப்பிட்டு உடனடியாக எழுதியனுப்புங்கள்.

— ஆசிரியர்.



கையை மறந்தாள். புது வாழ்வில் துள்ளினாள். ஹமீது இராவுத்தர் மனைவியின் கைப்பாவையாக மாறினார். மஸ்தானும் அம்மா அப்பா வலையில் சிக்கினான். விளைவு? அவனுக்கு வேறு இடத்தில் பெண் நிச்சயமாயிற்று.

கதிஜா புழுங்கினாள். புழுவாய்த் துடித்தாள். ஆனால் பொறுமை இழக்கவில்லை. அல்லாஹ்வின் மீது பாரத்தைப் போட்டாள். நிம்மதியானாள்.

ஆனால் பாத்திமா பீவிக்கு இதைச் சகித்துக் கொள்ளப் பொறுமை இல்லை. பொங்கி அழுதாள். மனம் நொந்து குமுறினாள். ''நம்பிய பாவி இப்படித் துரோகம் செய்து விட்டானே'' என்று புலம்பித் தீர்த்தாள்.

**க**ல்யாண தினத்துக்கு முந்தின நாள் மாலையில்தான் அவர்களுக்கு அழைப்பே வந்தது. அதுவும் தம்பியோ தம்பி மனைவியோ அல்லது மஸ்தானோ கூட வந்து அழைக்கவில்லை. வேறு நபரிடம் நிக்காஹ் அழைப்புப் பத்திரிகையை அதற்குரிய கவரில் வைத்து ஹமீது இராவுத்தர் கொடுத்தனுப்பினார்.

கல்யாண அழைப்புக் கவரைப் பிரித்துப் பார்க்காமலே அதை ஒரு மூலையில் எறிந்தாள் பாத்திமா பீவி.

''நீ என்ன சொன்னாலும் சரி. இந்தக் கல்யாணத்துக்கு நான் நிச்சயம் போகமாட்டேன். உன்னையும் போக அனுமதிக்கமாட்டேன்!'' — பாத்திமா பீவி கதிஜாவிடம் கண்டிப்பாகக் கூறிவிட்டுக் கனத்த மனத்தோடு படுக்கையில் சாய்ந்தாள்.

''அம்மா நீ பொறுமை இழந்து விட்டாய். அல்லாஹ்வை நம்பு. அவன் நமக்கு வழி காட்டுவான். இப்ப உள்ள நிலையில் உனக்கு என்ன சொன்னாலும் புரியாது. நன்றாகத் தூங்கு. காலையில் பேசிக்கொள்ளலாம்!'' — கதிஜா கண்கலங்க அம்மாவிடம் சொல்லி விட்டுத் தானும் படுக்கையில் சாய்ந்தாள்.

**பொ**ழுது விடியும் நேரம். பள்ளிவாசலில் பாங்கு ஒலிக்கும் சப்தம் கேட்டது. கதிஜா எழுந்தாள். முகம் கழுவி, கைகால்கள் சுத்தம் செய்து காலைத் தொழுகையை முடித்தாள். மூலையில் கிடந்த கல்யாண அழைப்புக் கவர் அவள் கண்ணில் பட்டது.

முன்தினம் அம்மா இருந்த கோபத்தில் அதை அவள் பிரித்துக்கூட பார்க்கமுடியவில்லை. இப்பொழுது அம்மா நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். கதிஜா கவரை எடுத்துப் பிரித்துப் பார்த்தாள்.

திருமண அழைப்புப் பத்திரிக்கையுடன் பத்தாயிரம் ரூபாய்க்கு ஒரு செக்கும் அதில் இருந்தது. கதிஜா உலகத்தைப் புரிந்து கொண்டாள்.

அம்மா தூக்கம் கலைந்து எழுந்தாள். கதிஜா அம்மா அருகில் சென்றாள். ''அம்மா! மச்சான் நிக்காஹ்விற்கு நாம் போக வேண்டாம்.''

பாத்திமா பீவி தன் மகளைப் பரிதாபமாகப் பார்த்தாள்.

## வரலாறு படைக்கும் வர்த்தமானன் பதிப்பகம்!

# சந்தாதாரர் ஆகுங்கள், சலுகை தொடர்ந்து பெறுங்கள்!



மாதம்

* பிப்ரவரியும் புதிய சந்தாதாரர் மாதமாகக் கருதப்படும்.
* இம்மாதம் நூல் வாங்குவோர்க்கு 40% தள்ளுபடி தொடர்ந்து எல்லா மாதங்களிலும் கிடைக்கும் அப்படி நூல் வாங்குவோர் அனைவரும் எங்கள் பதிப்பகத்தின் நிரந்தர சந்தாதாரராகக் கருதப்படுவர்.
* சந்தாவுக்கெனத் தனிக் கட்டணம் ஏதும் இல்லை.
* பிப்ரவரிக்குப் பிறகு புதிதாக வாங்குவோர்க்கு இந்தச் சலுகை கிடையாது.
* ஒவ்வொரு புத்தகம் வெளிவரும் போதும் சந்தாதாரர்க்குக் கடிதம் மூலம் தனிப்பட்ட முறையில் தகவல் தெரிவிக்கப்படும். குறிப்பிட்ட தேதிக்குள் விரும்பினால் வாங்கலாம். வாங்க வேண்டும் என்ற கட்டாயம் ஒன்றுமில்லை. ஒரே ஒரு நிபந்தனை மட்டும்தான் உண்டு. பிப்ரவரியில் வாங்குவோர்க்கு மட்டுமே தொடர்ந்து சலுகை கிடைக்கும். நிபந்தனை அவ்வளவே!
* ஒரு பக்கம் மூலம் - எதிர்ப்பக்கம் உரை என்னும் முறையில் அமைந்துள்ள எமது பேரிலக்கியங்களை யாவரும் படித்துப் பயன் பெறலாம்.
* எனவே பின்வரும் நூல்களில் எவற்றையேனும் வாங்கிச் சந்தாதாரராக ஆகுங்கள். பணம் வந்த உடனே நூல்களை அனுப்பும் போது உங்களது சந்தா எண் குறித்த அட்டை ஒன்றைக் கூடவே அனுப்புகிறோம். எதிர்காலத்தில் சந்தா எண்ணைக் குறிப்பிட்டு நூல்கள் வாங்க அது உதவியாக இருக்கும்.

| நூல் பெயர் | தொகுதி | விலை | சலுகை விலை |
|---|---|---|---|
| பெரியபுராணம் | 6 | ரூ 250 | ரூ 150 |
| கம்பராமாயணம் | 9 | ரூ 450 | ரூ 270 |
| கந்தபுராணம் | 10 | ரூ 460 | ரூ 276 |
| வில்லிபாரதம் | 6 | ரூ 230 | ரூ 138 |
| புறநானூறு | 2 | ரூ 75 | ரூ 45 |
| பத்துப்பாட்டு | | ரூ 25 | ரூ 15 |
| உத்தரகாண்டம் | 2 | ரூ. 80 | ரூ 48 |
| சிலப்பதிகாரம் | 3 | ரூ 42 | ரூ 25 |
| திருக்குறள் | | ரூ 25 | ரூ 15 |
| திருவாய்மொழி (முதல் தொகுதி) | | ரூ 30 | ரூ 18 |
| தண்டியலங்காரம் | | ரூ 30 | ரூ 18 |
| மனோன்மணீயம் | | ரூ 30 | ரூ 18 |
| நாலடியார் | | ரூ 22 | ரூ 13 |

சலுகை விலையை M.O. அ D.D. மூலம் அனுப்புக. உடனே புத்தகங்களை V.P.P யில் அனுப்புகிறோம். V.P.P செலவை மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலைப் பெறுக.

பணம் அனுப்ப வேண்டிய முகவரி:

VARTHAMANAN PATHIPPAGAM,
ARR COMPLEX, 141, Usman Road, T. Nagar, Madras - 600 017.
(பனகல் பார்க் அருகில்)

(குறிப்பு: தொடர்ந்து இந்த ஆண்டுக்குள் வர இருக்கும் நூல்கள் : திருவிளையாடல் புராணம், பட்டினத்தார் பாடல்கள், தாயுமானவர் பாடல்கள், திருவாசகம், தேம்பாவணி, மணிமேகலை, இவை தவிர ஆறு மருத்துவ நூல்கள்)

நூல்களை நேரிலும் பெறலாம்: அலுவலக வேலை நேரம்: 9.30 A.M. to 1.30 P.M. & 3.00 P.M. to 7.30 P.M.

# BALU JEWELLERS ACCEPT FIXED DEPOSITS

| | | |
|---|---|---|
| Period | : | 1 year and above |
| Rate of Interest | : | 18 % per annum |
| Amount of Deposit | : | Rs. 5000/- and above |
| Interest payable | : | Monthly |

For details call on :



Balu Jewellers
DIAMOND, GOLD & SILVER

72, USMAN ROAD, T. NAGAR,
MADRAS — 600 017
PHONE : 441812, 441741

Invest for your golden future.



# சிவகாமியின் சபதம்

மூன்றாம் அத்தியாயம்

## சிநேகப் பிரதிக்ஞை

ஒரு பக்கம் மாமல்லருடன் சல்லாபம் செய்து கொண்டு வந்த போதே, மற்றொரு பக்கத்தில் காஞ்சிமா நகரின் விசாலமான இராஜ வீதிகளையும், வீதியின் இருபுறமும் காணப்பட்ட மாட மாளிகைகளையும், ஈ மொய்ப்பது போல் ஜனக்கூட்டம் நிறைந்த கடை வீதிகளையும், இடையிடையே தீபாலங்காரங்களுடன் விளங்கிய சிவாலயம் விஷ்ணு ஆலயங்களையும் தெய்வத் தமிழை வளர்த்த சைவ வைஷ்ணவ மடங்களையும், பௌத்தர் சமணர்களின் கோயில்களையும், வேதகோஷம் எழுந்த ஸமஸ்கிருத கடிகை ஸ்தானங்களையும், சிற்பசித்திர கலா மண்டபங்களையும் பரஞ்சோதி கண்கொட்டா ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டு வந்தார்.

எட்டு மாதத்துக்கு முன்பு அவர் தெற்குக் கோட்டை வாசல் வழியாகப் பிரவேசித்த அன்றிரவு இருந்ததைக் காட்டிலும் இன்று நகரில் கலகலப்பும் களையும் அதிகமாயிருந்தன. அன்றைக்கு யுத்தச் செய்தி திடீரென்று வந்திருந்தபடியாலும் கோட்டை வாசல்கள் சாத்தப்பட்டு நகரமெல்லாம் ஒற்றர் வேட்டை நடந்து கொண்டிருந்தபடியாலும் காஞ்சி நகரம் அப்படிப் பொலிவிழந்து காணப்பட்டது போலும்! அந்த ஆரம்ப பீதிக்குப் பிறகு ஜனங்கள் மறுபடியும் ஒருவாறு மனோதைரியம் அடையவே எல்லாக் காரியங்களும் வழக்கம் போல் நடந்து வருகின்றன போலும்! ஆனால் இதெல்லாம் எத்தனை நாளைக்கு? அதி சீக்கிரத்தில் மீண்டும் இந்தச் சௌந்தரிய நகரம் அழகும் பொலிவும் இழந்து இருளடைந்து ஜனசூன்யமாகத் தோன்றப் போகிறதல்லவா? — இந்த எண்ணங்கள் எல்லாம் மாமல்லரின் ரதத்தில் வந்து கொண்டிருந்த போது பரஞ்சோதியின் உள்ளத்தில் இடையிடையே எழுந்து கொண்டிருந்தன.

ஏகாம்பரநாதர் கோயில் சந்நிதிக்கு வந்ததும் அந்தத் திவ்ய சந்நிதியின் மகோந்நதமான தோற்றத்திலிருந்தே அதுதான் ஏகாம்பரர் கோயிலாயிருக்க வேண்டுமென்று பரஞ்சோதி ஊகித்து, தம்முடைய ஊகம் சரிதானா என்று மாமல்லரை வினவினார்.

"ஆம்; தளபதி! இந்தச் சந்நிதிக்கு இதற்கு முன்னால் நீர் வந்ததே இல்லையல்லவா?" என்று மாமல்லர் கேட்டார்.

"இல்லை; வந்ததில்லை. முன்தடவை இந்த நகரத்திற்குள் நான் பிரவேசித்த போது, ஏகாம்பரர் சந்நிதியைத்தான் தேடிக் கொண்டு வந்தேன். ஆனால் இந்த இடம் வரையில் அன்றைக்கு வந்து சேரவில்லை. கொஞ்சம் ரதத்தை நிறுத்தச் சொல்லுங்கள். காஞ்சியின் இருதய ஸ்தானத்தை நன்றாய்ப் பார்க்கிறேன்" என்றார் பரஞ்சோதி.

கோயிலுக்குள்ளே ஒரு தீப வரிசைக்குப் பின் இன்னொரு தீப வரிசையாக முடிவின்றி ஜொலித்துக் கொண்டிருந்த அலங்கார தீபங்களையும், கோயிலுக்கெதிரே கம்பீரமான தேர் நின்ற நாற்சந்தியையும் தேரடியிலிருந்து நாலா பக்கத்திலும் பிரிந்து சென்ற தேரோடும் வீதிகளையும், குன்றுகளைப் போலப் பலவகைப் புஷ்பங்கள் குவிந்து கிடந்த கடைகளையும், தேங்காயும் கதலியும் மலை மலையாகக் குவிந்து கிடந்த கடைகளையும், அற்புத

அமரர் **கல்கி**

மான சிற்பத் திறமுடைய தூண்களின் மேலே அமைந்த நூற்றுக்கால் மண்டபங்களையும் பரஞ்சோதி பார்த்து விட்டு, "ஆஹா! புலிகேசியின் காதலுக்குக் காரணம் இல்லாமற் போகவில்லை!" என்றான்.

"புலிகேசியின் காதலா? என்ன சொல்கிறீர், தளபதி?" என்று மாமல்லர் கேட்டார்.

"புலிகேசி இந்தக் காஞ்சி சுந்தரியின் மேல் கொண்டிருக்கும் காதலைப் பற்றி வீரர் வஜ்ரபாஹு எனக்குச் சொன்னார். காஞ்சி என்னும் பெயரைக் கேட்டதும் காதலியின் பெயரைக் கேட்டால் காதலனுடைய முகத்திலே என்ன மாறுதல் உண்டாகுமோ, அம் மாதிரி மாறுதல் புலிகேசியின் முகத்தில் உண்டாயிற்றாம்!"

"தளபதி! வீரர் வஜ்ரபாஹு எவ்வளவு தான் சாமர்த்தியசாலியானாலும், அப்படித் துணிந்து புலிகேசியிடம் போயிருக்கக் கூடாதல்லவா? உம் கருத்து என்ன?" என்று மாமல்லர் கேட்டார்.

அதற்கு மறுமொழி சொல்லாமல் பரஞ்சோதி, "பிரபு! இங்கே திருநாவுக்கரசர் மடம் எது?" என்றார்.

"அதோ வெறுமையாய்க் கிடக்கிறதே. அந்தக் கட்டிடந்தான்..."

"ஆஹா! இந்த மடத்தில் சேர்ந்து தமிழ்க் கல்வி கற்பதற்காகத்தான் வந்தேன். நான் கல்வி கற்பதற்காக வந்த முகூர்த்தம் மடத்தையே மூடும்படியாகி விட்டது!" என்றார் பரஞ்சோதி.

நரசிம்மவர்மர் மீண்டும் இளநகை புரிந்து விட்டு, "பல்லவ குலத்துக்கு நீர் எவ்வளவோ மகத்தான சேவைகளையெல்லாம் செய்ய வேண்டுமென்று ஏற்பட்டிருக்கும் போது நாவுக்கரசரின் சீடராக நீர் எப்படிப் போயிருக்க முடியும்? அதோடு, என்னிடம் நீர் தமிழ் பயில வேண்டும் என்பதும் தெய்வத் தமிழ் மொழியை அளித்த இறைவனுடைய சித்தமாக ஏற்பட்டிருக்கிறதே!"

"இதைத் தெரிந்து கொண்டுதான் அன்றிரவு அந்த யானை மதங்கொண்டு ஓடி வந்ததோ, என்னவோ? அதன் காரணமாகத்தானே இப்படியெல்லாம் நேரிட்டது?" என்றார் பரஞ்சோதி. உடனே சட்டென்று நினைத்துக் கொண்டு, "ஐயா! ஆயனரும் சிவகாமியும் சுகமாயிருக்கிறார்களா?" என்று கேட்டார்.

"சிவகாமி" என்ற பெயரைக் கேட்டதும் மாமல்லரின் முகத்தில் ஏற்பட்ட மாறுதலைப் பரஞ்சோதி கவனியாமல் போகவில்லை. ஆஹா! காதலைப் பற்றிய வஜ்ரபாஹுவின் கூற்றுக்கு மாமல்லரே உதாரணமாக இருக்கிறார்!" என்று மனத்தில் எண்ணிக் கொண்டார்.

மாமல்லர் மறுமொழி கூறிய போது அவருடைய குரலிலே கூட மாறுதல் இருந்தது. "சுகமாயிருக்கிறார்கள் என்றுதான் அறிகிறேன், தளபதி! ஆனால், அவர்களை நான் பார்த்துப் பல மாதங்கள் ஆயின. ஆயனரின் பழைய அரண்ய வீட்டிலேதான் அவர்கள் இருக்கிறார்கள். சக்கரவர்த்தியின் கட்டளைப்படி துறைமுகத்தில் திருப்பணி செய்த கல் தச்சர்களையெல்லாம் * பாரத மண்டபங்கள் கட்டுவதற்கு அனுப்பிய பிறகு ஆயனரும் மாமல்லபுரத்திலிருந்து தமது அரண்ய வீட்டுக்குத் திரும்பி வந்து விட்டார்" என்று மாமல்லர் கூறிய போது, அவருடைய வார்த்தைகளில் முன்னே காணப்படாத உணர்ச்சி தொனித்தது.

மறுபடியும் மாமல்லர் பரஞ்சோதியின் கரங்களை அழுத்திப் பிடித்துக் கொண்டவராய் உணர்ச்சி ததும்பிய குரலில் கூறினார்: "தளபதி பல்லவ சாம்ராஜ்யத்துக்கு எவ்வளவோ சேவை சென்ற எட்டு மாதத்தில் செய்திருக்கிறீர்; இன்னும் எவ்வளவோ செய்யப் போகிறீர். ஆனால் அன்றிரவு நீர் செய்த வீரச் செயலைப் போன்ற மகத்தான சேவை வேறொன்றும் இருக்க முடியாது. ஆயனரையும் சிவகாமியையும் காப்பாற்றினீர் அல்லவா? அந்தச் செயலை நான் எவ்வளவு தூரம் பாராட்டுகிறேன் என்பதற்கு இதோ அடையாளத்தைப் பாரும்!" என்று கூறி அன்று மத யானை மீது பரஞ்சோதி எறிந்த வேலை எடுத்து நீட்டினார்.

மாமல்லரின் உணர்ச்சி ததும்பிய வார்த்தைகளினால் பரஞ்சோதியின் மனமும் கனிந்திருந்தது. எனவே, அவர் மறுமொழி கூற முடியாதவராய் மாமல்லர் நீட்டிய வேலை வாங்கிக் கொள்வதற்காக ஒரு கையினால் அதன் அடிப் பகுதியைப் பிடித்தார்.

நரசிம்மவர்மர் வேலைக் கொடுக்காமல் தாமும் அதை ஒரு கையினால் பிடித்துக் கொண்ட வண்ணம் சொன்னார்: "இந்த ஏகாம்பரர் சந்நிதியில் நான் எத்தனையோ

---

* பல்லவச் சக்கரவர்த்திகளின் காலத்தில் தொண்டை மண்டலத்துக் கோயில்களில் பாரத மண்டபங்கள் கட்டப்பட்டதுடன், பாரதம் வாசிப்பவர்களுக்கு மானியம் விடப்பட்டது என்பது கல்வெட்டுக்களின் ஆதாரம் உடைய சரித்திர உண்மையாகும்.

தடவை எனக்கு ஓர் உற்ற நண்பனை அளிக்க வேண்டுமென்று பிரார்த்தனை செய்திருக்கிறேன். அந்தப் பிரார்த்தனையின் பயனாகவே நீர் இந்தக் காஞ்சிக்கு வந்ததாக நம்புகிறேன். தளபதி! இந்த சந்நிதியிலேயே நீரும் நானும் இன்று சிநேகப் பிரதிக்ஞை செய்து கொள்வோம். ஆயனரையும் சிவகாமியையும் காத்த இந்த வீரவேலின் மீது ஆணை வைத்து நம்முடைய நட்பை நிலைப்படுத்திக் கொள்வோம்'' என்றார்.

ஏகாம்பரநாதரின் திருச்சந்நிதியில் அப்போது தீபாராதனைக்குரிய ஆலாட்சி மணி ''ஓம் ஓம்'' என்று ஒலித்தது.

அன்றிரவு கண்ணபிரான் கமலியிடம் சொன்னான்: ''என் கண்ணே! உன்னுடைய சிநேகிதி சிவகாமியின் சக்களத்தியை இன்று ரதத்தில் வைத்து ஓட்டிக் கொண்டு வந்தேன். அதை நினைத்தால் எனக்குத் துக்கம் துக்கமாய் வருகிறது!''

''இது என்ன பிதற்றல்? நீ சொல்வது உண்மையானால் அவள் யார் என்று இப்பொழுது சொல்லு! உடனே போய் விஷங் கொடுத்துக் கொன்று விட்டு வருகிறேன்'' என்றாள் கமலி.

''அவள் இல்லை, அவன்! மதயானை மேல் வேல் எறிந்து உன் சிநேகிதியைக் காப்பாற்றிய வாலிபன் போர்க்களத்திலிருந்து திரும்பி வந்திருக்கிறான். அவன் இப்போது காஞ்சிக் கோட்டையின் தளபதியாம். அவனோடு குமார சக்கரவர்த்தி குலாவியதைப் பார்த்தால் சிவகாமியைக் கூட மறந்து விடுவார் போலத் தோன்றியது.''

''உனக்குத் தெரிந்த லட்சணம் அவ்வளவுதான். அந்தப் பிள்ளையின் மேல் மாமல்லருக்கு ஏன் அவ்வளவு பிரியம் என்று நான் சொல்லட்டுமா? என் தோழியைக் காப்பாற்றிக் கொடுத்ததற்காகத்தான் கண்ணா! இதிலிருந்தே மாமல்லரின் மனம் எவ்வளவு உறுதியாயிருக்கிறதென்று தெரிகிறது!'' என்றாள் கமலி.

''உன் புத்திக் கூர்மையே கூர்மை! கேவலம் ஒரு ரத சாரதியைப் போய் நீ கல்யாணம் செய்து கொண்டாயே? இராஜ்யம் ஆளும் மதிமந்திரியையல்லவா நீ மணந்து கொண்டிருக்க வேண்டும்!'' என்று கண்ணன் சொன்னான்.

''அதனாலேதான் காதலுக்குக் கண்ணில்லை என்ற பழமொழி ஏற்பட்டிருக்கிறது; உனக்குத் தெரியாதா?'' என்றாள் கமலி.

நான்காம் அத்தியாயம்

## சிவகாமியின் பிறந்த நாள்

ஆகா! சிவகாமியை நாம் பார்த்து எத்தனை காலம் ஆகி விட்டது! காஞ்சியை விட்டு வெளியே போகக் கூடாது என்று மாமல்லருக்குத்தான் சக்கரவர்த்தி கட்டளை இட்டிருக்கிறாரே தவிர நாம் போவதற்கு எவ்விதத் தடையுமில்லையல்லவா? எனவே, அரண்ய மத்தியிலுள்ள ஆயனரின் சிற்ப மாளிகைக்கு உடனே செல்வோம்.

ஆயனரின் வீட்டை நெருங்கும் போது எட்டு மாதத்துக்கு முன்பு அங்கே நாம் கண்ட காட்சிக்கும் இப்போது நாம் காணும் காட்சிக்கும் உள்ள வித்தியாசம் நம்மைத் தூக்கி வாரிப் போடுகிறது. அப்போது நாம் கண்ட கலகலப்பு இப்போது அங்கே இல்லை. 'கல் கல்' என்ற கல்லுளியின் சப்தம் கேட்கவில்லை. ஆயனரின் சீடர்கள் ஆங்காங்கு மரங்களின் அடியில் உட்கார்ந்து சிற்ப வேலை பயின்று கொண்டிருக்கவில்லை.

காட்டு மரங்களின் தோற்றத்திலே கூட வித்தியாசம் இருக்கிறது. முன்னே நாம் வந்திருந்த போது வஸந்த காலம். விருட்சங்கள் புதிய தளிர்கள் விட்டிருந்தன. மாமரங்களில் இளம் தளிர்களுடனே பூங்கொத்துக்கள் குலுங்கின. அரச மரங்களும் ஆல மரங்களும் தங்க நிற இலைகளால் மூடப்பட்டிருந்தன.

இப்போதோ, மரங்களில் முற்றிய கரும் பசுமை பொருந்திய இலைகளும் பாதி காய்ந்த சருகுகளும் காணப்படுகின்றன. பூமியெல்லாம் இலைச் சருகுகள் பரவிக் கிடக்கின்றன. சில இடங்களில் குட்டை குட்டையாக மழைத் தண்ணீர் தேங்கியிருக்கிறது.

முதல் நாள் இரவு பெய்த மழை நீர் மரங்களின் இலைகளில் தங்கியிருந்து, குளிர்ந்த வாடைக்காற்று அடிக்கும் போது 'சலசல'வென்று பூமியில் உதிர்கிறது. அந்தப் பிரதேசத்தில் ஏற்பட்டிருந்த மாறுதலை நினைத்து மரங்களும் துயரப்பட்டுக்

கண்ணீர் உதிர்ப்பது போலத் தோன்று கிறது.

வன விருட்சங்களில் வாழ்ந்த பட்சி களின் அமுதகானத்துக்கு மட்டும் எவ்விதக் குறைவும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. விதவிதமான மதுரக் குரல்களில் எத்தனை எத்தனையோ கீதங்கள் கேட்கின்றன. ஆனால், அந்தக் குரல்களிலும் ஒரு வேற்றுமை தெரிகிறது. முன்னே அக் குரல் களில் தொனித்த குதூகலக் களிப்பை இப்போது காணவில்லை. சென்று போன ஆனந்தமான காலத்தை நினைத்து மனங் கசிந்து பாடும் சோக கீதமாகத் தொனித் தது!

வீட்டை நெருங்கிச் சென்றோமா னால் ஒரே ஒரு விருட்சத்தினடி யில் மட்டும் யாரோ இரண்டு பேர் உட்கார்ந்து வேலை செய்து கொண்டிருப்பது கண்ணுக்குப் புலனா கிறது.

ஆம்! அவர்களில் ஒருவர் ஆயனச் சிற்பி தான்! ஆனால் அந்த மேதையின் முகத்தில் முன்னம் நாம் பார்த்த சாந்தம் இப்போது எங்கே? அந்தக் கண்களிலே இந்த ஆவல் வெறி எப்போது குடிகொண்டது? அவரும் அவருடன் இருக்கும் இன்னொருவனும் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்?

ஏதேதோ பச்சிலைகளைச் சேர்த்து அவர்கள் கல்லில் வைத்து இடித்தும் அரைத்தும் சாறு இறக்கிக் கொண்டிருக் கிறார்கள். அவர்களுக்கு அருகில் அடுப்பு ஒன்று எரிந்து கொண்டிருக்கிறது. அதில் ஒரு சட்டியில் பச்சிலைச் சாறு கொதித்துக் கொண்டிருக்கிறது. சுற்றுப்புறத்தில் பற்பல சட்டிகளில் வர்ணக் குழம்புகள் இருக்கின் றன. இதையெல்லாம் பார்க்கும் போது ஆயனச் சிற்பியார் சித்திரம் எழுதுவதற் குரிய வர்ணச் சேர்க்கை முறைகளைப் பரிசிலனை செய்து கொண்டிருக்கிறார் என்று ஊகிக்கலாம்.

போர்க்களத்திலிருந்து சக்கரவர்த்தி மாமல்லபுரத்தி லும் மற்ற இடங் களிலும் நடந்து கொண்டிருந்த சிற்பப் பணி களையெல்லாம் நிறுத்தி விடும்படி கட்டளை அனுப்பிய பிறகு ஆயனர் தமது அருமை மகளை அழைத்துக் கொண்டு பழைய அரண்ய வீட்டுக்கு வந்து சேர்ந்தார். தம்முடைய சீடர்களைத் தொண்டை மண்ட லத்திலுள்ள எல்லாக் கோயில்களிலும் பாரத மண்டபங்களைக் கட்டுவதற்காக அனுப்பி விட்டார். ஒரே ஒரு சிற்றாளை மட்டும் தம்முடைய உதவிக்கு வைத்துக் கொண்டிருந்தார்.

சில காலமாகவே ஆயனருடைய உள்ள மானது சிற்பக் கலையிலும் நாட்டியக் கலை யிலும் ஈடுபடவில்லை. நாகார்ஜுன பர்வதத்துக்கு அனுப்பிய பரஞ்சோதி திரும்பி வருவதை அவர் வெகு ஆவலுடன் எதிர்பார்க்கலானார். சில நாளைக்கெல் லாம் அவருக்குப் பரஞ்சோதியைப் பற்றிய வெகு விசித்திரமான செய்திகள் கிடைத் தன. அவன் பல்லவ சைனியத்தில் சேர்ந்து, பல்லவக் குதிரைப் படையின் தளபதியாகி விட்டான் என்றும் அதிசயமான வீரச் செயல்களைப் புரிந்து வருகிறான் என்றும் வதந்திகள் உலாவின.

அதற்குப் பிறகு நாக நந்தியடிகளும் அங்கு வரவில்லை. ஆயன ருக்கு என்றுமழியாத வர்ண இரகசியத்தை அறிந்து கொள்ளும் ஆவல் ஒன்றுக்குப் பத்து மடங்காகப் பெருகியது. எனவே அவர் சிற்பக் கலை முதலியனற்றையெல் லாம் ஒரு பக்கத்தில் கட்டி வைத்து விட்டு வர்ணச் சேர்க்கை சம் பந்தமான பரிசோத னைகளை ஆரம்பித் தார். சிவகாமியின் நாட்டியக் கலை வளர்ச் சியிலே கூட அவருக் குச் சிரத்தை குறைந்து விட்டது. இது சிவ காமிக்கும் சௌகரிய மாகவே இருந்தது. ஏனெனில் அவளுடைய வாழ்க்கையாகிய வானத்திலே ஜகஜ் ஜோதியாக உதயமாகி அவளுடைய இதயத் தாமரையை மலரச் செய்திருந்த பிரேமசூரி யனைப் பாடிப் பரவி வாழ்த்தி வணங்குவ தற்கே அவளுக்குக் காலம் போதாமலிருந் தது. உலகத்தில் இது வரையும் யாரும் கண்டும் கேட்டுமறியாத அதிச யக் காதற் செல்வம் தனக்குக் கிட்டியிருப்ப



தாக எண்ணிய சிவகாமி அந்தக் காதலையும் காதலனையும் பற்றிச் சிந்திப்பதிலும், மனோ ராஜ்யம் செய்வதிலும் வருங்காலத்தைப் பற்றிய ஆகாசக் கோட்டைகள் கட்டுவதிலும் எல்லையற்ற இன்பத்தை அடைந்து வந்தாள். அந்த மனோராஜ்ய வாழ்க்கையிலேதான் எத்தனை ஆனந்தம்! எத்தனை ஏமாற்றம்! கூடிக் குலாவும் நேரம் எவ்வளவு! சொல்லம்புகளினால் துன்புறுத்தல் எவ்வளவு? — அந்த எட்டு மாதத்து மனோராஜ்ய வாழ்விலே எத்தனையோ யுகயுகாந்திரங்களில் அனுபவிக்க வேண்டிய சோகச் சாயை படர்ந்த ஆனந்தங்களையும் இன்ப ரேகை கலந்த வேதனைகளையும் சிவகாமி அனுபவித்து விட்டாள் என்றே சொல்ல வேண்டும்.

இருக்கட்டும்; இப்போது சிவகாமியைப் போய்ப் பார்ப்போம். அவள் அநேகமாக வீட்டுக்குள்ளே தன்னந் தனியாக இருக்கலாம். உள்ளே போய் நேரிலேயே சிவகாமியைப் பார்த்து அவளுடைய நிலையைத் தெரிந்து கொள்வோம்.

வீட்டை அணுகும் போது, உள்ளே பேச்சுக் குரலைக் கேட்டுச் சற்றுத் திகைத்து நிற்கிறோம். சிவகாமி ஏகாந்தமாயிருப்பாள். அவளுடன் மனம் விட்டுப் பேசி அவளது மனோ நிலைமையை அறியலாம் என்றல்லவா நினைத்தோம்? அவளுடன் பேசிக் கொண்டிருப்பது யார்? ஒருவேளை அவளுடைய செவிட்டு அத்தையாயிருக்குமோ? — இல்லை; ஆடவரின் குரல், — அதிலும் இரண்டு மூன்று ஆடவர் குரல்கள் அல்லவா கேட்கின்றன?

உள்ளே நுழைவதற்கு முன்னால் வாசற்படிக்கு அருகில் நின்று சம்பாஷணையைச் சற்று ஒட்டுக் கேட்டு விட்டு உள்ளே போகக் கூடிய சந்தர்ப்பந்தானா என்பதை தெரிந்து கொள்வோம்.

"அம்மணி! எங்களிடம் கோபித்துக் கொண்டு என்ன பயன்? பல்லவ குமாரரின் கட்டளையைத்தானே நிறைவேற்றுகிறோம்?" என்று ஓர் ஆண் குரல் சொல்லிற்று.

"பல்லவ குமாரரும் ஆயிற்று! கட்டளையும் ஆயிற்று! மாமல்லருக்கு இன்றைக்கு வேறு வேலை இல்லை போலிருக்கிறது! திடீரென்று சிற்பியின் மகளை நினைத்துக் கொண்டாராக்கும். இருக்கட்டும்; அந்தத் தந்தப் பெட்டிக்குள்ளே என்ன இருக்கிறது? திறந்து காட்டுங்கள்!" என்று கோபங் கொண்ட கோமகளின் அதிகாரக் குரலில் சிவகாமி ஆக்ஞாபித்தாள்.

"தென்பாண்டி நாட்டிலே கொற்கைத் துறைமுகத்தில் குளித்து எடுத்த அற்புதமான முத்துமாலைகள் இந்தத் தந்தப் பெட்டியில் இருக்கின்றன அம்மணி! இதோ பாருங்கள்! கன்யாகுப்ஜத்து ஹர்ஷவர்த்தன சக்கரவர்த்தியின் பட்டமகிஷி கழுத்திலே கூட இம்மாதிரி முத்துமாலை கிடையாது! எப்படி ஜொலிக்கிறது, பார்த்தீர்களா?" என்று ஏவலாளன் கூறினான்.

"போதும், போதும்! இந்த முத்துமாலைகள் யாருக்கு வேண்டும்? உங்கள் குமார சக்கரவர்த்தியிடம் நான் சொன்னதாகச் சொல்லு: ஆயனச் சிற்பியின் வீட்டுக்கு அருகே தாமரைக் குளக் கரையில் புன்னை மரம் ஒன்று புஷ்பித்திருக்கிறது. காலை நேரத்தில் அம் மரத்தடிக்குச் சென்றால் தரையிலே ஆயிரமாயிரம் முத்துக்கள் சொரிந்து கிடக்கும். அந்தப் புன்னை மலர் முத்துக்களின் அழகுக்கு உறைபோடக் காணாது இந்தக் கொற்கை முத்து என்று சொல்லு. வேண்டுமானால், ஒருநாள் காலையில் வந்து பார்த்து விட்டுப் போகட்டும். அதோ! அந்தத் தங்கப் பேழையிலே என்ன இருக்கிறது?" என்று சிவகாமி கேட்டாள்.

"அம்மணி! அலைகடலின் ஆழத்திலே சௌந்தரிய தேவதை ஒளித்து வைத்திருந்த பவளங்கள், — சமுத்திர ராஜனின் கடுங் காவலை மீறி அபகரித்துக் கொண்டு வரப்பட்டவை, — மன்னாதி மன்னர்களெல்லாம் தங்கள் மணிமகுடத்தில் புனைவதற்கு ஆசைப்படக் கூடியவை, — ஒப்பற்ற பவளங்கள், — இந்தத் தங்கப் பேழையில் இருக்கின்றன. பாரத நாடெங்கும் புகழ் பெற்ற பரத சாஸ்திர ராணியின் மேனியை அலங்கரிப்பதற்கு உகந்தவை என்று இந்தப் பவள மாலைகளைப் பல்லவ குமாரர் அனுப்பியிருக்கிறார்...."

"அழகுதான்! இந்தப் பவள மாலைகள் உங்கள் பல்லவ குமாரருக்கு அதிசயமாய்த் தோன்றலாம். ஆனால் அவரிடம் நீ போய்ச் சொல்லு: ஆயனச் சிற்பி வீட்டின் இரண்டாம் கட்டிலே அந்தச் சிற்பியின் மகள் வளர்க்கும் கிளிகள் இருக்கின்றன. அந்தக் கிளிகளின் வாயில் உள்ள செம்பவளத்துக்கு எப்பேர்ப்பட்ட கடல் பவளமும் இணையாகாது. வேண்டுமானால் நேரிலே வந்து பார்த்து விட்டுப் போகும்படிச் சொல்லு. இருக்கட்டும்; அதோ அந்தக் கூடைகளிலே என்ன?"

"அரண்மனை உத்தியானவனத்திலே மலர்ந்த சண்பகப் பூக்கள், குண்டு மல்லிகைகள், பிச்சி மலர்கள்...."

"வேண்டாம், வேண்டாம்! உடனே எல்லாவற்றையும் வெளியே கொண்டு

## அருள்வாக்கு



"யுத்யஸ்வ!" — "உம்! போடடா சண்டை!" என்று அர்ஜுனனை நன்றாகக் காரியத்தில் உசுப்பிக் கிளப்பினார் பகவான். "நான் ஞானியாகப் போகிறேனே! யுத்தம் எதற்கு?" என்றவனை, "அதெல்லாம் கூடாது. யுத்யஸ்வ — விகதஜ்வர:" என்றார்.

'விகதஜ்வர' என்றால் என்ன? "ஜ்வரமில்லாதவனாக" என்று அர்த்தம். 'அர்ஜுனனுக்கு ஜ்வரமா அடிச்சது?' என்றால் ஆமாம், தன் மனுஷ்யாளைக் கொல்வதா என்ற பாசஜ்வரம் அடித்தது. மனஸ் அவனுக்குக் கொதியாகக் கொதித்தது. அது ஜ்வரம்தான்! இந்த பந்துத்வ ஆசையினால், தர்மத்துக்காகப் பண்ண வேண்டிய யுத்தத்தைப் பண்ணப்படாது என்று நினைத்தான். இப்படி ஆசாபாசம் மனஸிலே இருக்கும்போதே, தர்மத்துக்கும் மேற்பட்ட ஞானத்தில் தனக்கு ரொம்ப ஈடுபாடு ஏற்பட்டு விட்டாற் போல, "ராஜ்யாதிகாரத்தில் என்ன இருக்கு? நான் ஸந்நியாசியாகிப் பிச்சை வாங்கிச் சாப்பிடறேன்" என்று வேதாந்தமெல்லாம் சொன்னான்.

ரஜோகுண ப்ரதானனான மஹாவீரன் அர்ஜுனனை மெஜாரிட்டியினரான ஸாதாரண ஜனங்களின் 'ரெப்ரஸன்டேடிவ்' ஆக வைத்தே பகவான் கர்மாவை உபதேசித்தார். பெரிய ஸாதகனாக வைத்தல்ல. கர்மா பண்ணுவது, ஆனாலும் மனஸின் கொதிப்பு முதலான ஸொந்த உணர்ச்சி க்ருத்ரிமங்கள் இல்லாமல் பண்ணுவதுதான் அவனுக்கான வழி என்பதாக உபதேசித்தார்.

ஆனால் வெறும் வறட்டு கர்மாவாயில்லாமல் பக்தி சேர்ந்தால்தான் கர்மயோகத்தைச் செவ்வனே செய்து, பூர்த்தி பண்ண முடியுமென்பதால், "சண்டை போடு" என்று முதலில் சொன்னதற்கு அப்புறம் ஒரு qualifying clause சேர்த்து,

"மாம் அநுஸ்மர யுத்ய ச"

என்றார். "வெறுமனே சண்டை போடாதே! என்னை நினைச்சுக்கோ — மாம் அநுஸ்மர! வெளி ஸ்மரணை யுத்தத்தில் இருந்தாலும், அதற்குத் துணையாக உள்ளே இருக்கிற அநுஸ்மரணை என்னிடம் இருக்கட்டும்! அப்படி, பக்தியைத் துணை சேர்த்துண்டு சண்டை போடு! அதாவது தேவாஸுர யுத்தத்திலே அஸுர சக்திகளை எதிர்த்து ஸத்கர்ம, ஸத்குணங்களின் படையைக் கொண்டு ஸத்பக்தியின் துணையில் சண்டை போடு!" என்று சொல்லியிருக்கிறார்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

---

போங்கள். உங்கள் பல்லவ குமாரரிடம், 'சிவகாமி ஒரு காலத்தில் பூ என்றால் பிராணனாயிருந்ததுண்டு. ஆனால், ஏதோ ஒரு காரணத்தினால் இப்போது பூவைக் கண்டால் பிடிப்பதேயில்லையாம்!' என்று தெரியப்படுத்துங்கள் .... ஆமாம்; இதையெல்லாம் எதற்காக இப்போது பல்லவ குமாரர் அனுப்பினாராம்?"

"இன்றைக்குத் தங்களுடைய பிறந்த தினம் என்பதற்காக அனுப்பியுள்ளார், அம்மணி!"

"அப்படியா? மிகவும் சந்தோஷம். இந்த ஏழைச் சிற்பி மகளின் பிறந்த தினத்தைக் குமார சக்கரவர்த்தி நினைவு வைத்துக் கொண்டிருப்பது பற்றி நிரம்பச் சந்தோஷம். ஆனால், அவருடைய ஞாபக சக்தியில் ஏதோ கோளாறு ஏற்பட்டிருக்க வேண்டும். நீங்கள் இந்தப் பொருள்களையெல்லாம் எடுத்துக் கொண்டு போய் 'இன்று சிவகாமியின் பிறந்த நாள் இல்லை' என்று சொல்லி விடுங்கள். 'சிவகாமி என்கிற பெண் பூமியில் பிறக்கவே இல்லை' என்று பல்லவ குமாரரிடம் சொல்லி விடுங்கள்!"

இதென்ன விந்தை? சற்று முன்னால், ஆயனச் சிற்பியை வீட்டுக்கு வெளியே மரத்தடியில் பார்த்தோமல்லவா? இப்போது வீட்டுக்குள்ளேயிருந்து அவருடைய கனிந்த குரலைக் கேட்கிறோம்:—

"குழந்தாய்! சிவகாமி! உனக்கு என்ன வந்து விட்டது? ஏன் இப்படி இவர்களை விரட்டியடிக்கிறாய்? குமார சக்கரவர்த்தியே உன்னுடைய பிறந்த தினத்தை ஞாபகம் வைத்துக் கொண்டிருந்து வரிசைகள் அனுப்பியிருக்கும் போது...."

"சும்மா இருங்கள், அப்பா! குமார சக்கரவர்த்தியை இலேசுப்பட்டவர் என்று

நினைக்காதீர்கள். முத்துமாலையையும், ரத்தின ஹாரத்தையும், புஷ்பக் கூடைகளையும் அனுப்பி நம்மை ஏமாற்றி விடப் பார்ப்பார். யாரை நம்பினாலும் மாமல்லரை நம்பக் கூடாது. ஏவலாளர்களே! ஏன் நிற்கிறீர்கள்? எடுங்கள் இவற்றை எல்லாம்! உடனே நடையைக் கட்டுங்கள்! எடுக்கிறீர்களா, இல்லையா!''

''இதோ எடுத்துக் கொண்டு போகிறோம், அம்மா! இதோ எடுத்துக் கொண்டு போகிறோம்.''

இவ்வாறு பயந்து நடுங்கிக் கொண்டு கூறிய ஏவலர்கள் வரிசைப் பொருள்களை எடுத்துக் கொண்டு வீட்டுக்கு வெளியே வருவார்களென்று நாம் எதிர்பார்க்கிறோம். ஆனால், யாரும் வெளியே வருகிற வழியைக் காணோம்!

நல்ல மர்மம் இது! வீட்டுக்குள் பேச்சுக் குரல் மட்டும் கேட்கிறதே தவிர, வேறு நடமாடும் சந்தடியைக் காணோமே? வியப்பாக அல்லவா இருக்கிறது! உள்ளே போய்ப் பார்த்து விடலாம்.

உள்ளே போனால், நமது வியப்பு ஒன்றுக்குப் பதின் மடங்காகிறது. ஏனெனில், உள்ளே சக்கரவர்த்திக்காக ஆயனர் அமைத்திருந்த சிற்ப சிம்மாசனத்திலே சிவகாமி மட்டுந்தான் தன்னந்தனியாக உட்கார்ந்திருக்கிறாள்! இத்தனை நேரமும் அவள் சம்பாஷணை நடத்தியதெல்லாம் யாருடன்?

இதோ மர்மம் வெளியாகிறது. சிவகாமி பேசுகிறாள்; தனக்குத் தானே பேசிக் கொள்கிறாள்:

''ஏவலாளர்களே, இங்கே வாருங்கள்!'' என்கிறாள்.

ஒருவரும் வரவில்லை. ஆனாலும் எதிரில் யாரோ இருப்பதாக எண்ணிக் கொண்டு பேசுகிறாள்.

''உங்கள் பல்லவ குமாரரிடம் இதையும் சொல்லுங்கள். 'மாமல்லர் என்றைக்கு மனம் கனிந்து சிற்பி மகள் சிவகாமியைப் பார்ப்பதற்கு வருகிறாரோ, அன்றைக்குத் தான் அவளுக்குப் பிறந்த தினம்' என்று சொல்லுங்கள், தெரிகிறதா?''

இவ்விதம், சொல்லி விட்டுச் சிவகாமி சற்றுச் சும்மா இருந்தாள். பிறகு மறுபடியும் பேசினாள். ஆனால் இந்தத் தடவை குரல் மாறுபட்டிருந்தது. இப்போது நாம் கேட்பது ஆண் பிள்ளைக் குரல்; ஏற்கெனவே கேட்ட ஏவலாளனின் குரல் தான்.

''அம்மணி! மன்னிக்க வேண்டும். தங்களுடைய பிறந்த தினத்தை முன்னிட்டு இந்த வரிசைப் பொருள்களை அனுப்பிய பல்லவ குமாரர், சற்று நேரத்துக்கெல்லாம் தாமே தங்க ரதத்தில் வருவதாகவும் தெரியப்படுத்தச் சொன்னார்.''

மறுபடியும், சிவகாமியின் மகிழ்ச்சி ததும்பிய உண்மைக் குரல். ''ஆஹா! மாமல்லரே வருவதாகச் சொன்னாரா! அப்படியானால் இன்றைக்கு என் பிறந்தநாள்தான்!.... அப்பா! இன்றைக்கு உங்கள் மகளின் பிறந்த நாள். தெரிகிறதா? என்ன பேசாமல் இருக்கிறீர்கள்! இன்றைக்கு ஒரு நாளாவது பச்சிலை அரைப்பதை நிறுத்துங்கள்... அதோ ரதம் வரும் சப்தம் கேட்கிறதே!''

சிவகாமி, சிம்மாசனத்திலிருந்து துள்ளி எழுந்தாள். அப்போது, உண்மையாகவே வீட்டுக்கு வெளியில் ரதம் வரும் சப்தம் கேட்டது. முகத்தில் சொல்ல முடியாத ஆவல் ததும்பப் பரபரப்புடன் வாசற் புறம் ஓடி வந்து பார்த்தாள்.

வீட்டை நெருங்கி ரதம் வந்து கொண்டிருந்தது. அது குமார சக்கரவர்த்தியின் தங்க ரதம்தான். ரதசாரதியும் கண்ணபிரான்தான். ஆனால், ரதத்தில் இருப்பது யார்? வேறு யாரோ போல் இருக்கிறதே!

ஆஹா! என்ன ஏமாற்றம்! வருகிறவர் யாராயிருந்தாலும், நிச்சயமாக மாமல்லர் அல்ல! — சிவகாமி, அந்தச் சிற்ப வீட்டின் வாசல் தூணைப் பிடித்துக் கொண்டு கற்சிலையைப் போல் நின்றாள்.

(தொடரும்)



''என் மனைவி ஒரு நடிகையா இருந்தாலும் என்கிட்டே சொல்லிட்டுத்தான் எந்தக் காரியத்தையும் செய்வா.''

''அப்படியா...?''

''ஆமா; என்னை அடுத்த மாதம் டைவோர்ஸ் செய்யப் போற விஷயத்தைக் கூட இப்பவே என்கிட்ட சொல்லிட்டாளே!''

— சீர்காழி. வி. ரேவதி.

# தர்மதுரை

ஒட்டுமொத்த ரஜினி ரசிகர்களும் கைதட்டி, விசிலடித்து ரசிப்பவை: கிராமத்து விவசாயியாக நடிப்பு, கௌதமியுடன் கிளுகிளு காதல், வசன உச்சரிப்பு — 'அப்ப விட்டுடு'!

விதவிதமான வர்ணச் சிதறலுக்கு மத்தியில் ரஜினிகாந்த் 'கொஞ்ச நேரம் கொஞ்சலாமா — என நளினமாக நடனமாடுவது, கிழவி வேட கௌதமியை நொறுங்க அணைப்பது என கிளுகிளுப்புத்தான். ஆனால் அந்த இளசுகள் உடம்பு முழுக்க எண்ணெய் தடவிக் கொண்டு, பளபள வெளிச்சத்தில் தோன்றும் காட்சிகளில் அழகை விட ஆபாசம்தான் அதிகம்.

அப்பா, மலையாளம் புகழ் மது, சிங்கத்தின் மீசை போன்று ஒருவித கம்பீரம். தம்பிகளுக்குக் கடன் வாங்கிக் கொடுக்கும் ரஜினியை பெல்ட்டால் விளாசுகிறார். பின்னொரு சமயத்தில் மறுபடியும் கடன் பெற்றுத் தந்து விட்டுத் தானே பெல்ட் எடுத்துத் தரும் ரஜினியை நெகிழ்ந்து அணைக்கிறாரே... ரசிக்கத்தக்க ஒரு பக்கக் கதை!

ஆனால் திரைக் கதையை ஒட்டுமொத்தமாக எடுத்துக் கொண்டால் ஏதோ ஒரு பள்ளிக்கூடத்து அரை டிராயர் பையனிடம் கேட்டு வாங்கினது மாதிரி சிறுபிள்ளைத் தனமாயிருக்கிறது. தம்பிகள் வெறுப்பது, ஏமாற்றுவது, நெருங்குவது, ஏமாற்றுவது... — குழப்பம்.

கதாநாயகன் தவறு செய்யாமல் ஏழு வருட ஜெயில் தண்டனை அனுபவிப்பதும் அப்பாவின் மாரடைப்பும், விபத்தில் குழந்தையின் மரணமும் இன்னபிறவும் தொண்டை அடைக்க வைக்கும் சோகங்கள் என்றாலும் இத்தனை சோகம் அவசியம்தானா?

ரஜினி படத்தில் சண்டைக் காட்சி இல்லாமலா? கையில் பாய்ந்து விடும் குண்டை ரஜினி எடுக்கும் யுத்தி: விஸ்கி பாட்டில் உடைத்து ஒரே குத்து! ரத்த சகதியின் மீது விஸ்கி ஊற்றி, நெருப்பு பற்ற வைத்து, மறுபடியும் சண்டை!

ரஜினியின் தேர்ந்த நடிப்புக்கு உதாரணங்கள்: பார்ட்டியில் அவமானத்தைத் தாங்கிக் கொள்ளுதல். வீட்டுக்கு வரும் மற்றொரு மருமகள் வைஷ்ணவிக்கு அப்பாவிடம் பேசி ஆசி பெற்றுத் தருதல். ஜெயிலில் குழந்தையைத் திரும்பத் திரும்ப வந்து பார்த்தல்... மேலும் சில.

ரஜினியின் அத்தனை ஒத்துழைப்பும், தயாரிப்பாளரின் தாராள பண மழையும் மோசமான திரைக்கதை, மூச்சு முட்டும் ரீ-ரிக்கார்டிங், ஒட்டாத பகட்டான சோகம் ஆகியன திணிக்கப்பட்டதால் வீணாகிப் போயின.

என்றாலும் ரஜினி ரசிகர்களான தர்மதுரைகள் இருக்கும் போது யாருக்கு என்ன கவலை?

— சுந்தர்ஜி





# அரசியல் கட்சிகளை நுழைய விடாத கிராமம்!

ஒரு குக்குக்குக் கிராமம்! மூன்று பக்கம் பச்சை வயல், ஒரு பக்கம் பளிங்கு போல் குளம் — சூழ்ந்த அரிஜன கிராமம்!

ஐம்பத்திரண்டே வீடுகள்! நூறு சதம் வீடுகளிலும் 'பள்ளி' வாசனை! 95 சதம் வீடுகளில் 'கல்லூரி' வாசனை!

வீட்டுக்கு வீடு, வங்கி, எல். ஐ. ஸி., ராணுவம், போலீஸ், கஸ்டம்ஸ் என்று அரசுத் துறைகளில் வேலை பார்க்கும் நபர்கள்! எல்லோர் விழிகளிலும், 'நாங்கள் யாருக்கும் தாழ்ந்தவர்களல்ல' என்று உரக்கக் கூறிடும் 'விழிப்பு' ஒளி!

இந்தக் கிராமத்தின் பெயர்: வள்ளுவர் நகர். திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்ட — ஆழ்வார்குறிச்சியிலிருந்து நேர் கிழக்கில், பத்துநிமிட நடை தூரத்தில் உள்ளது. கையகலக் கிராமமானாலும் ஆரம்பப்பள்ளி, அண்ணா அறிவாலயம், மக்கள் நலக் கல்விக் கழகம், பாண்டியன் விளையாட்டுக் கழகம், புரட்சிகர இளைஞர் படை என்று கல்வி, சமூக அமைப்புக்கள் பல இருக்கின்றன. மாதந்தோறும் தவறாமல் வெளிவரும் 'புதிய உதயம்' என்னும் கையெழுத்துப் பத்திரிகையும் உண்டு. மூன்று 'மினி' தெருக்கள்! பெயருக்குக்கூட ஓலைக் குடிசை இல்லை. எல்லாமே கல் வீடுகள்.

— இந்த ஆச்சரிய வளர்ச்சிக்கு என்ன காரணம்? இந்த வட்டாரத்தில் வேறு பல அரிஜன கிராமங்களில் நடக்காத வளர்ச்சி இங்கு மட்டும் எப்படி ஏற்பட்டது? வள்ளுவர் நகருக்குள் நுழைந்து விசாரிக்க முற்படுகிறோம்.

பிரபல தனியார் நிறுவனமொன்றில் வேலை பார்க்கும் முற்போக்கு இளைஞர், சண்முகசுந்தரத்தைக் கேட்கிறோம்:



* பேராசிரியர் குமாரசாமி



* முத்துராஜ்



* சண்முகசுந்தரம்

"போன தலைமுறையிலேயே இங்குள்ள சிலர் வேலை தேடி இலங்கைக்கும் பம்பாய்க்கும் போய் வந்ததன் பாதிப்பு ஒரு காரணம்!" என்கிறார் சண்முகசுந்தரம். "அது ஆரோக்கியமான, போட்டி மனப்பான்மையை வளர்த்தது. பம்பாயில் பிரபலமாய் உள்ள இவ்வூர்த் தமிழர் ஏ.எல். பெருமானின் திட்டமிட்ட — இடைவிடாத முயற்சி மற்றொரு காரணம்!"

**ப**ம்பாயில் வாழும் ஏ. எல். பெருமானை இளைஞர்கள் எல்லோரும் 'வள்ளுவர் நகரின் தந்தை' என்றே அழைக்கிறார்கள்!

"பிச்சை எடுத்தாவது படி" — ஏ. எல். பி. என்று பிரியமாய் அழைக்கப்படும் பெருமான், தம் ஊர் மக்களுக்கு அடிக்கடி கூறும் தாரக மந்திரமாம் இது!

ஏ. எல். பி. வருடத்துக்கு ஒரு தடவை பிறந்த ஊருக்கு வருவாராம்! மாலையில் ஊரிலுள்ள இளைஞர்களை எல்லாம் ஒன்றாய் அழைத்து வைத்து 'உற்சாக' டானிக் கொடுப்பாராம்!

'திருத்து' என்ற பெயரை வள்ளுவர் நகராக மாற்றியது; கி. ஆ. பெ., குன்றக்குடி அடிகளார் போன்ற முக்கிய பிரமுகர்களை அழைத்து வந்து, பட்டி மன்றம், வழக்காடு மன்றம், கருத்தரங்கம் போன்ற நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்தது; மக்கள் நலக் கல்விக் கழகம், அண்ணா அறிவாலயம், மகளிர் மன்றம் — ஆகியவற்றை ஆரம்பித்து வைத்தது; இந்த உயிர்த் துடிப்பான காரியங்களை முன்னின்று நடத்திய பெருமை, ஏ. எல். பி.க்கு உண்டு. ஏழு வருடங்களுக்கு முன் — 'வீடு தோறும் ஒரு குறள்' என்ற திட்டத்தின்படி, ஒவ்வொரு வீட்டுச் சுவரிலும் ஒரு குறள் எழுதி வைத்தார்களாம்! .

ஏ. எல். பி.யின் வாக்கை மதித்துப் பம்பாயில் வேலை தேடிக் கொண்டவர்கள் அதிகம் என்பதால் இவ்வூரில் பாதிப் பேர் நன்றாய் 'இந்தி' பேசுகிறார்கள்! இந்தியோடு



* பெருமான் — குடும்பத்துடன்.

பம்பாயின் உடை நாகரிகமும் வள்ளுவர் நகருக்கு வந்திருக்கிறது!

**க**ல்வி, நாகரிகம், பகுத்தறிவு எல்லாம் இணைந்து, இவ்வூரிலிருந்து கிளி, நாடி ஜோஸியம், மாந்திரீகம் இத்யாதிகளை விரட்டி விட்டனவாம்.

**வ**ள்ளுவர் நகரின் சீர்திருத்தத்துக்கு, சிந்தனை வளத்துக்குச் சுயநலமின்றித் தொண்டாற்றியிருக்கின்ற ஆழ்வை, பரமகல்யாணி கல்லூரி பேராசிரியர் மு. செ. குமாரசாமியைச் சந்திக்கிறோம்:

"இயல்பாகவே சமூக சேவையில் எனக்கும் என் மனைவிக்கும் நாட்டம் அதிகம். நண்பரான ஏ. எல். பி. யோடு கைகோத்து முழு மூச்சாகக் களத்தில் இறங்கினேன். வாரத்தில் மூன்று நாட்கள் திருக்குறள் வகுப்பு; பல பட்டி மன்றங்கள்; ஆயிரத்துக்கும் மேற்பட்ட ஆக்கபூர்வமான கலந்துரையாடல்கள் என்று ஒன்றரை வருடங்களுக்கு



* கல்லூரி மாணவ...



* ...மாணவியர்.

வரிசையாக நடத்தினோம். இந்தப் பணியில் என் குடும்பத்துக்கு அன்று ஏற்பட்ட எதிர்ப்புக்களையும் மீறிச் செயல்பட்டதன் பலனை, இன்று கண்கூடாகப் பார்க்கும் போது. பெருமையாய் இருக்கிறது!'' என்கிறார் குமாரசாமி.

''இந்தப் பணியைத் தொடராமல் இடையில் ஏன் விட்டுவிட்டீர்கள்?'' என்கிறோம். குமாரசாமியிடம்.

''நாங்கள் செய்ய வேண்டியதைச் செய்து முடித்து விட்டோம். இனி வள்ளுவர் நகர் வாசிகள்தான் அப்பணிகளைத் தொடர வேண்டும்...'' என்று சிரித்துக் கொண்டே விடை கொடுக்கிறார் பேராசிரியர்.

கஸ்டம்ஸ் அதிகாரியாக இருக்கும் பிரபல பம்பாய்த் தமிழர் பாலசுந்தரம். பத்திரிகைகளில் பரபரப்பாக அடிபட்ட ராபின் மெயினைக் கைது செய்த சென்னை சப் — இன்ஸ்பெக்டர் சந்திரசேகர் ஆகியோர் இந்த ஊர்க்காரர்களே!

எல். ஐ. சி.யில் பணிபுரியும் ஆறுமுகம், 'திருத்து.' வள்ளுவர் நகரானதற்கு காரணம் சொல்கிறார்:

'' 'திருத்து... இந்த ஊரைத் திருத்து...' என்று ஊரின் பெயரில் மட்டும் எங்கள் முன்னோர்கள் எங்களுக்குக் கட்டளையிட்டதை, உண்மையாகவே திருத்தி, வள்ளுவர் நகராக்கி விட்டோம்!'' பெயரும் திருந்தி விட்டது ஊரும் முன்னேறிவிட்டது!''

இங்குள்ள இளைஞர்கள் சிலர், புரட்சிகர இளைஞர் படை என்ற அமைப்பின் மூலம் செயல்பட்டு வருகிறார்கள்.

புதிய உதயம் பத்திரிகையில் சூடான கட்டுரைகள் எழுதுகிறார்கள். அவ்வப்போது புதுக்கவிதையில் பிட் நோட்டீஸ் அடித்து வெளியிடுகிறார்கள். பெண் கல்விக்கு முக்கியத்துவம் கொடுத்துத் தீவிர பிரசாரம் செய்கிறார்கள்.

இந்த ஊரில் எந்த ஓர் அரசியல் கட்சியும் நுழைய முடியாதாம்! வால் போஸ்டர் கூட ஒட்டக் கூடாது என்று கட்டுப்பாடாம்!

இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நாட்டாண்மை, புதிதாய்த் தேர்ந்தெடுக்கப்படுகிறார். பஞ்சாப் நேஷனல் பேங்கில் பணிபுரியும் முத்துராஜ் — இப்போதைய நாட்டாண்மை! இவரைச் சந்திக்கிறோம்:

''வள்ளுவர் நகரின் தந்தை ஏ. எல். பி. என்றால், கடவுள் ஸிம்ஸன் அனந்தராம கிருஷ்ணன்! பக்கத்தில் — ஆழ்வார் குறிச்சியில் — அவர் கல்லூரியும் பள்ளியும் அமைத்திரா விட்டால் இந்த வளர்ச்சியை நாங்கள் எட்டியிருக்கவே மாட்டோம்! அதனால் எங்கள் நன்றிக்கடனாக அன்னாரின் வெண்கலச் சிலையை நிறுவுவதற்கு முயற்சி எடுத்து வருகிறோம்!''

அரசியல் கட்சிகளுக்கு உள்ள தடையைப் பற்றிக் கேட்ட போது — ''இந்தச் சின்னஞ் சிறு கிராமத்தில் அரசியலை அனுமதித்தால், அரசியல்வாதிகள் எங்களைக் கூறு கூறாகப் பிரித்துத் தங்களை மட்டும் வளர்த்துக் கொள்வார்கள் என்ற சூட்சுமத்தை நாங்கள் புரிந்து கொண்டதால், இந்த விஷயத்தில் மிகுந்த கட்டுப்பாட்டோடு இருக்கிறோம்'' என்றார்.

''அரசியலைப் புறக்கணிப்பது ஆரோக்கியமானதுதானா?''

''நோ! யூ மிஸ் அண்டர்ஸ்டாண்ட்! அரசியலை நாங்கள் புறக்கணிக்கவில்லை! அரசியல் நோக்கர்களாக இருக்கிறோம்! அரசியலைப் புரிந்து கொள்கிறோம். அதனால்தான் நேரடியாக அரசியலில் ஈடுபட்டு அது எங்கள் வளத்தையும் வளர்ச்சியையும் பாதிக்க விடுவதில்லை.''

— நம்பிக்கையுடன் சொல்கிறார் நாட்டாண்மை!

ஓசையில்லாமல் வள்ளுவர் நகரில் ஒரு புரட்சி நடந்திருக்கிறது என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்!




கட்டுரை, வாசகர் யோசனை:

**நெல்லை குரலோன்.**

## ஒரு வித்தியாசமான ஆசை!



'யூ' என்ற சீன மன்னனுக்கு ஒரு காதலி இருந்தாள். அவளுக்கு ஒரு விசித்திரமான ஆசை. அதாவது, பட்டுத்துணிகளைக் கிழித்தால் ஒருவித ஓசை வருமே, அந்த ஓசையை எப்போதும் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்பதே. காதலியின் காலடியிலேயே இருந்த மன்னன் அவளுடைய ஆசையை நிறைவேற்ற உத்தரவிட்டான். பிறகென்ன? ஒருவர் மாற்றி ஒருவர் பட்டுத் துணிகளை அவள் காது கேட்கக் கிழித்துக் கொண்டே இருந்தனர்!

— ஏ. ஜி. ராமகிருஷ்ணன்.

# ஆகாசத் தாமரை 4

ஏதைப் பற்றிய நாடகமென்று ரகு, துருவ்விடம் சொன்னான்.

சையத் நக்வி என்ற இளம் கல்லூரி ஆசிரியரும் அனிதா என்ற ஹிந்து சக ஆசிரியையும் ஒருவரையொருவர் விரும்பி, அவர்களுடைய பெற்றோர்கள் சம்மதிக்காத காரணத்தால், பதிவுத் திருமணம் செய்து கொண்டனர். இங்குதான் தொடங்கியது அவர்கள் பிரச்னை. முதலில் குடியிருக்க வீடு கிடைக்கவில்லை. வெளிப்படையாக இல்லாவிட்டாலும், மறைமுகமாகக் கல்லூரி நிர்வாகம் இருவருக்கும் தொந்தரவு கொடுத்து வந்தது. திடீரென்று ஒரு நாள், ஏதோ ஒரு சின்னத் தவறுக்காக நக்வியை வேலையை விட்டு நீக்கிவிட்டார்கள், கல்லூரி நிர்வாகத்தினர். பல்கலைக் கழகத்துக்கு 'அப்பீல்' செய்தான் நக்வி. விசாரணை தொடங்கவேயில்லை. இதற்குள் அனிதாவுக்கும் வேலை போயிற்று. அவர்களுக்குத் தொல்லை கொடுப்பதில் இரண்டு மதத்தினரும் இணைந்தார்கள். என்ன ஆயிற்றோ தெரியவில்லை. நக்வியும் அனிதாவும், தங்களைக் காவியக் காதலர்களாகப் பாவித்துக் கொண்டார்களோ என்னவோ, ஒரு நாள் தற்கொலை செய்து கொண்டார்கள்.

இது உண்மை நிகழ்ச்சி. ஒரு மாதத்துக்கு முன்னால் பத்திரிகைகளில் வந்த செய்தி. இதை நாடகமாக நடித்துக் காட்டினார்கள், தில்லிப் பல்கலைக் கழக மாணவர்கள். உண்மை நிகழ்ச்சியை அடிப்படைக் கருவாகக் கொண்டு அதற்கு அற்புதமான முறையில் கலைப் பரிமாணம் சேர்த்திருந்தார்கள். வெறும் காதல் கதையாகவோ அல்லது பிரசாரக் கதையாகவோ போயிருக்க வேண்டியதைக் கலைப் படைப்பாக மாற்றி, அடிப்படைச் செய்தியையும், பார்க்கின்றவர்களுக்கு உணர்த்தியது சந்தியாவின் இயக்கம்.

நாடகம் முடிந்ததும் எல்லோரும் கைதட்டினார்கள். துருவ் சந்தியாவையே பார்த்துக் கொண்டிருந்தான். அவள் அவனைப் பார்த்ததாகவே காட்டிக் கொள்ளவில்லை.

நாடகத்தைப் பற்றி விவாதம் தொடங்கியது. அநேகமாகப் பாராட்டுக்கள்தான். ஆனால், அதே சமயத்தில் அங்குமிங்கும் தென்பட்ட ஓரிரு குறைகளைச் சுட்டிக் காட்ட மாணவர்கள் தயங்கவில்லை.

"நீங்கள் என்ன நினைக்கிறீர்கள், நாடகத்தைப் பற்றி?" — திடும்மென்று துருவ் பக்கம் திரும்பிக் கேட்டாள் சந்தியா.

அவன் இதை எதிர்பார்க்கவில்லை.

"என்னையா கேட்கிறீர்கள்?" என்று லேசான அதிர்ச்சியுடன் கேட்டான்.

"ஆமாம்."

"எல்லாருக்கும் பிடித்திருந்தால் சரி, அது தானே ஒரு படைப்பின் வெற்றிக்கு அடையாளம்?" என்றான் துருவ்.

"உங்களுக்குப் பிடித்திருந்ததா, இதுதான் என் கேள்வி...?" என்றாள் சந்தியா.

"திறமையாகத் தயாரிக்கப்பட்டிருக்கிறது..." என்றான் துருவ்.

"இது பாராட்டா, தாக்குதலா?" என்று கேட்டாள் சந்தியா.

"'திறமையாகத் தயாரிக்கப்பட்டிருக்கிறது' என்கிறார், இது பாராட்டு அல்லாமல் வேறு என்ன, இது கூடவா உனக்குத் தெரியவில்லை?" என்று கேட்டாள் சந்தியாவின் அருகிலிருந்த பெண்.

"அவரை எனக்கு நன்றாகத் தெரியும், அதனால்தான் கேட்டேன்," என்றாள் சந்தியா புன்முறுவலுடன்.

"என்ன சொல்லுகிறாய், நீ?" என்றாள் அந்தப் பெண்.

"கலைப் படைப்புக்களில், திறமை என்பது ஓர் அற்பமான விஷயமென்றுதான் அவர் நினைக்கிறார், அப்படித்தானே துருவ்?"

துருவ் பதில் கூறவில்லை.

ரகுவுக்கு ஒன்றும் புரியவில்லை. துருவ், சந்தியாவை விரும்புவதைப் பற்றி அவனுக்குத் தெரியும். ஆனால் இவர்கள் பேசிக் கொள்வதினின்றும் அவர்களுடைய நட்பில் ஏதோ கீறல் விழுந்திருப்பது போல் அவனுக்குப் பட்டது.

"உன்னிடம் நான் பேச வேண்டும்" என்றான் துருவ் சந்தியாவிடம்.

"எதைப் பற்றி?"

அவளைச் சுற்றி ஒரு கூட்டம் நின்று கொண்டிருக்கும் போது, அவள் எதுவும் நடந்துவிடவில்லை என்பது போல், மிக இயல்பாக இப்படிக் கேட்டது அவனுக்குச் சிறிது ஆச்சரியத்தைத் தந்தது.

"காஃபி ஹவுஸ் போகலாமா?"

அவள் மறுப்பாள் என்று அவன் எதிர்பார்த்தான்.

"பை ஆல் மீன்ஸ்... ஒரு நிமிஷம்

இந்திரா பார்த்தசாரதி

இருங்க... இவங்களுக்கு 'இன்ஸ்ட்ரக்ஷன்ஸ்' கொடுத்துட்டு வந்துடறேன். இன்று சாயங்காலம் அஜ்மல்கான் 'பார்க்'லே ஒரு பெர்ஃபார்மன்ஸ் இருக்கு" என்றாள் சந்தியா.

காஃபி ஹவுஸில் நல்ல கூட்டம்.

"வகுப்பறைகளை விட இங்கே நல்ல கூட்டமா இருக்கும் போலிருக்கே, மிஸ்டர் ரகு?" என்றாள் சந்தியா.

ரகு புன்னகை செய்தான்.

பத்து நிமிடங்கள் காத்திருந்த பிறகு, மூவரும் உட்கார இடம் கிடைத்தது. காஃபிக்கு ஆர்டர் கொடுத்தார்கள்.

"நேற்று என் அம்மாவோட பேசினியா?" என்று கேட்டான் துருவ்.

"என்ன கேட்டீங்க?" என்றாள் சந்தியா துருவ்விடம்.

தான் கேட்டது அவள் காதில் விழவில்லையா? அல்லது இது பாவனையா?

"ஒன்றுமில்லே... உங்கப்பா எப்படி இருக்கார்?"

"ஃபைன். மிஸ்டர் ரகு. ஆர். ஷுட் ஐ ஸே டாக்டர் ரகு? நீங்க எங்கே 'டீச்' பண்றீங்க?" என்றாள் சந்தியா.

"இங்க்லீஷ் டிபார்ட்மெண்ட்லே..."

"ஓ..! நானும் இங்க்லீஷ்தான்..."

"ஐ நோ... மிராண்டா ஹவுஸ்" என்று புன்னகையுடன் கூறினான் ரகு.

"எப்படித் தெரியும் உங்களுக்கு?"

"இன்டர் — காலேஜ் டிபேட்லே உங்களுக்கு 'ஃபர்ஸ்ட் ப்ரைஸ்' கிடைக்கலையா? அப்போ அதுக்கு நானும் வந்தேன்."

"நீங்களும் கலந்துண்டீங்களா?"

"இல்லே... எங்க காலேஜ்லேதான் ஃபைனல்ஸ் நடந்தது; ஸெய்ன்ட் ஸ்டீபன்..."

"என்ன துருவ், பேசாம இருக்கீங்க?" என்றாள் சந்தியா.

"எனக்குச் சம்பந்தமில்லாத விஷயம் பத்திப் பேசிண்டிருக்கீங்க, நான் கலந்துக்கிறதுக்கு என்ன இருக்கு?" என்றான் துருவ்.

— "உங்களுக்குச் சம்பந்தப்பட்ட விஷயம்



எதுன்னு சொல்லுங்க, பேசலாம்... பார்க்கப் போனா, எல்லா விஷயமுமே, உங்களோட சம்பந்தப்பட்டுமிருக்கு, சம்பந்தப்படாமலுமிருக்கு... இது உங்க 'ஆட்டிட்யூடைப் பொறுத்த விஷயம,'' என்றாள் சந்தியா.

காஃபி வந்தது. ருசித்தார்கள்.

துருவ் சில விநாடிகள் சந்தியாவை உற்றுப் பார்த்தான். அவள் நேற்றைய விவகாரம் பற்றிக் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. அவள் அன்று சொன்னவையெல்லாம் வெறும் விளையாட்டுக்குத் தானா? அப்படியானால் அதை 'ஸீரியஸாக' எடுத்துக் கொண்டு, அவன் நேற்று அம்மாவிடம், சந்தியாவிடம் சொல்லும்படி சொன்னது அவன் அசட்டுத்தனத்தைத் தான் நிரூபிக்கும்.

ஆனால் அன்று அவள் சொன்னவை விளையாட்டுக்காக இருக்க முடியாது. கஸல் மயக்கத்தில், அவன் இசையிலாழ்ந்து உணர்ச்சிவயப்பட்டு அவள் பேசுவதாகத் தான் அவன் நினைத்தான்.

இன்று அவள் இயக்கிய நாடகத்தில், ஓர்



ஆண் — பெண் உறவை, வெறும் காதல் கதையாகக் கொச்சைப்படுத்தாமல் எவ்வளவு திறமையாக எடுத்துக் காட்டினாள்! அப்படியிருக்கும் போது, 'ஐ லவ் யூ' என்று சொல்லிச் சொல்லித் தேய்ந்து போய்ப் பொருளிழந்து நிற்கும் 'சொற்களையா அவள் அன்று தன்னிடம் கூறியிருப்பாள்?

அந்தச் சூழ்நிலையில் அவள் உணர்ச்சி வயப்பட்டுப் பேசியிருப்பாள் என்று அவன் நினைத்துக் கொண்டது, அவனே உணர்ச்சி வயப்பட்ட காரணத்தினால் ஏன் இருக்கக் கூடாது?

அப்படியானால், அவன் தன்னைப் பற்றி வைத்துக் கொண்டிருக்கும் அபிப்பிராயம் அடிப்படையிலேயே தவறானது.

''என்ன துருவ், பேசாமே இருக்கே, ஸே சம்திங்,'' என்றான் ரகு.

''அமைதியைக் காட்டிலும் பொருள் பொதிந்த பாஷை வேறொன்றுமில்லை என்பது அவர் அபிப்பிராயம்'' என்றாள் சந்தியா புன்னகையுடன்.

மறுபடியும் கிண்டலா?

''இசை அமைதியின் பாஷையா?'' என்று கேட்டான் ரகு.

''அமைதியே இசை. அதற்கு லயம் உண்டு. தாளம் உண்டு. எவனொருவன் இந்தப் பிரபஞ்ச இசையை உள்வாங்கி, அவனே இசையாகி, அவ்விசையாகவே தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறானோ, அவன்தான் உண்மையான கலைஞன்'' என்றான் துருவ்.

''இம்பாஸிபிள்,'' என்றான் ரகு.

''தத்துவார்த்த பாஷையில் கூறப் போனால், எவனொருவன் பிரபஞ்ச ரகஸ்யத்தை உள்வாங்கி அவனே அந்த ரகஸ்யமாகி, அந்த ரகஸ்யமாகவே தன்னை வெளிப்படுத்திக் கொள்கின்றானோ அவன் தான் கடவுள்,'' என்றாள் சந்தியா சிரித்துக் கொண்டே.

துருவ் சந்தியாவை ஆச்சர்யத்துடன் பார்த்தான். அவள் கிண்டலுக்காகக் கூறியிருக்கலாம், ஆனால் இதுதான் உண்மை.

'மிஸ்டிக்ஸ்' என்று அறியப்படுகிறவர்கள் அவர்கள் உணர்ந்த ரகஸ்யத்தை, அனுபவத்தைக் கணித சூத்திரத்தால் விளக்கிச் சொல்ல முடியுமா? அவர்களே அதற்கு விளக்கமாக இருப்பதுதான் உண்மை.

''சரி, நான் வரட்டுமா? துருவ்வோட மௌன பாஷையைப் புரிஞ்சுக்கிற பக்குவமோ, அனுபவமோ எனக்கு இன்னும் உண்டாகலே. நான் சாதாரண இந்த உலகப் பெண், இந்த உலக ஆசைகளும், சுத்தி இருக்கிற சமூகப் பிரச்னைகளை எப்படித் தீர்க்கிறதுன்னு கவலைப்படற மனசும் கொண்ட சராசரி... இன்னிக்குச் சாயந்திரம் ஒரு 'பெர்ஃபார்மன்ஸ்' இருக்கு. அது தான் என்னோட தற்போதைய அக்கறை... வரட்டுமா?'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தாள் சந்தியா.

அவள் போன பிறகு, ரகு சொன்னான்: ''எ 'ஃபாபுலஸ்' கேர்ல்... அவதான் உனக்கு

ஏத்தவன்னு நினைக்கிறேன் ... ஆகாயத்திலே பறந்துண்டிருக்கிற நீ பூமிக்கு வர வேண்டாமா?''

துருவ் பேசாமலிருந்தான்.

**கா**ரை எடுத்துக் கொண்டு துருவ் புறப்பட்ட போது, ''என்னை கனாட் ப்ளேஸ்லே இறக்கி விடறயா?'' என்று கேட்டான் ரகு.

''ஓ யெஸ். ஏறு வண்டியிலே...'' என்றான் துருவ்.

துருவ் மௌனமாகக் காரை ஓட்டிக் கொண்டு சென்றான்.

''சந்தியா இன்னிக்குத் தொடர்ந்து உன்னைக் இன்டல்ஜ் பண்ணின மாதிரி எனக்குப் பட்டது...'' என்றான் ரகு.

சிறிது நேரம் சென்றது.

''நான் சந்தியா பற்றிச் சொன்னதுக்கு நீ 'ரியாக்ட்' பண்ணலே, 'இட் மீன்ஸ் சம்திங்...'' என்றான் ரகு.

''என்ன ...?''

''நீதான் சொல்லணும்.''

''அவ பேரிலே எனக்கு 'இன்ட்ரெஸ்ட்' இல்லேன்னு நேத்திக்கு அம்மாவை விட்டு அவகிட்டே சொல்லச் சொன்னேன்.''

''வாட் டு யு மீன்? நீதான் அவளைத் துரத்திண்டு போனே. அப்புறம் இப்போ 'இன்ட்ரெஸ்ட்' இல்லேன்னா என்ன அர்த்தம்?'' என்று சிறிது கோபத்துடன் கேட்டான் ரகு.

''எனக்குச் சந்தியாவைப் புரிஞ்சுக்க முடியல்லே'' என்றான் துருவ்.

ரகு வாய் விட்டுப் பெரிதாகச் சிரித்தான்.

''என்ன சிரிக்கிறே?''

''நீ இதைச் சொல்லறது வேடிக்கையா இருக்கு. உன்னை யாராலே புரிஞ்சுக்க முடியறது? நேத்திக்கு அப்படிச் சொன்னே. இன்னிக்கு நீதான் அவளைக் காப்பி சாப்பிடக் கூப்பிட்டே... அவளைப் பொறுத்த வரையிலும், 'ஷி வாஸ் டோட்டலி ரிலாக்ஸ்ட்...' நீதான் டென்ஷன்லே இருந்த மாதிரி இருந்தது...''

''நீ என்ன நினைக்கிறே?''

''எதைப் பற்றி?''

''அவ சொல்ற மாதிரி அவ ஒரு சராசரிப் பெண் தானா?''

''மைடியர் துருவ், சந்தியா ஒரு கெட்டிக்காரப் பெண். தனக்கு என்ன வேணும்னு அவளுக்கு உறுதியாத் தெரியும். இன்னிக்குப் பாரு, ஒரு சாதாரணக் கதையை — 'கம்யூனல் ப்ராப்ளம்' பற்றிய ஒரு சாதாரணக் கதையை என்ன அழகா ஒரு கலைப் படைப்பா மாத்தித் தர அவளாலே முடிஞ்சிருக்கு... எஸ் ஐ நோ... தன்னை ஒரு சராசரின்னு சொல்லிண்டு, 'ஷி வாஸ் மீனிங் யூ...' நீ நேத்திக்கி உங்கம்மாகிட்டே சொன்னேன்னியே, அதைக் காட்டிலும் முட்டாள்தனம் வேற ஒண்ணுமிருக்க முடியாது. நான் வெளிப்படையாகவே சொல்றேன். அவ உனக்குத் தகுதியானவளாங்கிறதைக் காட்டிலும், நீ அவளுக்குத் தகுதியானவனான்னு நீயே உன்னைக் கேட்டுக்கோ... அவளுக்கு வாழ்க்கையிலே ஒரு 'மிஷன்' இருக்கு... உனக்கு? பாரதி சொல்லியிருக்கிற மாதிரி, ஒரு நல்ல வீணையைப் புழுதியிலே எறிஞ்சுண்டிருக்கே. லிட்டரலி ஆல்ஸோ...'' என்றான் ரகு.

''நான் வீணை வாசிக்கிறது எனக்காக. உனக்காகவோ அல்லது மத்தவங்களுக்காகவோ இல்லே... வயத்துக்குச் சாப்பாடு மாதிரி, என் ஆத்மாவுக்கு இசை தேவையா இருக்கு... நான் எப்படிச் சாப்பிடறேன் பாரு, என்னென்ன சாப்பிடறேன் பாருன்னு யாராவது 'பப்ளிக் டெமான்ஸ்ட்ரேஷன்' பண்ணி நீ பார்த்திருக்கியா? வொய் டோன்ட் யு அண்டர்ஸ்டாண்ட் மீ?'' என்று குரலைச் சற்று உயர்த்திப் பேசினான் துருவ்.

இதற்குப் பிறகு இருவரும் பேசவேயில்லை. 'கனாட் பிளேஸி'ல் ரகு இறங்கிக் கொண்டான்.

ஏன் ஒருவருமே அவனைப் புரிந்து கொள்ள மாட்டேனென்கிறார்கள்? பிறர் அவனைப் புரிந்து கொள்ள வேண்டுமென்பது அவனுக்கு அவசியந்தானா? அப்படியில்லையென்றால், ரகுவிடம் ஏன் குரலை உயர்த்தி அவன் பேசியிருக்க வேண்டும்?

சந்தியாவைப் பற்றி ரகு கூறியதை அவன் நினைத்துப் பார்த்தான்.

அவன் அவளுக்குத் தகுதியானவன் தானா?

அவளிடம் அவனுக்கு ஈடுபாடில்லை என்பது பற்றி அவன் கவலைப்பட்டதாகவே தெரியவில்லையே!

நாளைக்கு அவள் வீட்டுக்குப் போவதென்று தீர்மானித்தான் துருவ். சந்தியா தனக்குத் தேவை என்பது போல் அவனுள் ஓர் உணர்வு ஏற்பட்டது.

(தொடரும்)

நிருபர்: நீங்க ஏன் இப்பல்லாம் தமிழ்ப் பத்திரிகைகளிலே எழுதறதில்லே?

எழுத்தாளர்: எனக்கு இங்கிலீஷ் அவ்வளவா வராதுங்க; உரையாடலை எல்லாம் இங்கிலீஷ்லே எழுத முடியலை... அதான்...''

— 'நாகை கவின்'



# சூடாமணி சிந்திய கண்ணீர்

**சா**ப்பாட்டுப் பகுதியையும், சமையல் பகுதியையும் பிரிக்கும் வலைக் கதவு வழியாகச் சூடாமணி எட்டிப் பார்த்தாள். இன்னும் 'அதுவை'க் காணோமே என்பது போல் பார்த்தவள், தன்னையே சமாதானப்படுத்திக் கொண்டாள். வார்டனைப் பார்க்கவே ஒரு மணி நேரம் காத்திருக்க வேண்டும். இயக்குநரைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. வரும் போது வரட்டும்... ஆனால் இந்த பசங்களுக்குச் சப்பாத்தி கொடுக்க வேண்டிய நேரம் நெருங்குதே.

சூடாமணி, நேரப் போக்கிற்காகப் பார்க்கிறவள் மாதிரி எந்தவித பரபரப்பும் இல்லாமல், சாப்பாட்டு வளாகத்தைப் பார்த்தாள். அங்கேயோ –

ஒரு பெண்ணுக்கு, இரண்டு ஆண்கள் என்ற விகிதாசாரத்தில், ஒரே கூட்ட மயம். நாகாலாந்துக்காரி; அவளுக்கு அந்தப் பக்கமும், இந்தப் பக்கமுமாய் அவள் தோளில் செல்லமாய்த் தலைபோட்ட தோழர்கள்; இன்னொரு மேஜை பகுதியில், லுங்கியும், சட்டையும் போட்ட கேரளப் பெண்; அவள் சடையைக் கையில் தூக்கி வைத்து, ஆராய்ச்சி செய்த ஹரியானாப் பையன்; இன்னொரு மேஜை அருகில் ஓர் ஆள் நுழையும் அளவிற்கான காது வளையங்களைக் கொண்ட மணிப்பூர்க்காரி. அந்த வளையங்களை ஊஞ்சல் போல் பக்கத்திற்கு ஒன்றாக ஆட்டும் மராத்தி பையன் சின்டே; கன்னடப் பையன் பாட்டமல். கிதார் வாசிப்பு... ரேடியோ பாட்டு... ஒவ்வொருத்தனும், ஒவ்வொருத்தியும் ஒரே 'உருவமானது' போன்ற நிலைமை...!

சூடாமணி, அவளைப் பார்த்ததும், முகத்தைத் திருப்பிக் கொண்டாள். கடந்த இரண்டு மணி நேர உழைப்பில், உருவான இருநூறு சப்பாத்திகளையும் இரும்புக் கடாயில் இன்னும் சூடு போகாமல் புகை விட்ட சப்ஜிகளையும், வெள்ளரி, தக்காளி, வெங்காயக் கலவைகளையும் சரிசெய்யப் போனாள். அப்போது –

''ஹேப்பி டைம், ஹேப்பி டைம்''

சூடாமணி அந்த வலைக் கதவு வழியாகத் தன்னையும் அறியாமல் மீண்டும் கண்களைப் பாய விட்ட போது –

ஆப்பிள் பழப் படம் போட்ட சிலாக் சட்டை, கலர் பேண்டுக்குள் சிக்கி முதுகுக்குக் கீழ் துருத்தி நிற்க, காமாட்சி, இடுப்பில் ஒரு கையை வில் மாதிரி வளைத்து நிற்க, அந்த வளைவுக்குள் ஓர் அலகாபாத் பையன் தனது கையையும் வளையம் போல் பொருத்திக் கொள்ள –

இருவரும், எல்லோரையும் ஒட்டு மொத்தமாய்ப் பார்த்து, பகிரங்கச் சிரிப்பு சிரித்தபடியே, வெளியேறிக் கொண்டிருந்தார்கள். வெளியே தெரிந்த புதர் பக்கம் மெல்ல நடந்தார்கள். அந்த மெல்ல நடையிலும், ஒரு வேகம் இருந்தது. மீண்டும் கோரஸ் பாடல்...

'ஹேப்பி டைம்... ஹேப்பி டைம்..'

**ஏ**ழெட்டு மாதங்களுக்கு முன்பு, இதே 'மெஸ்' விடுதியில், ஆபீஸராகப் போகும் சின்னஞ் சிறுசுகள் நாலுக்காக 'மம்மி – டாடி' விளையாட்டுக்களைக் காட்டிய போது, சேலை கட்டிய ஒரே ஒருத்தி மட்டும், கன்னத்தில் கை வைத்தபடி, அந்தக் கையை மேஜையில் ஊன்றி, தன்னந்தனியாக உட்கார்ந்திருந்தாள். அங்குமிங்குமாகப் பரக்கப் பரக்கப் பார்த்தாள். இதே மாதிரி வலைக் கதவு வழியாகப் பார்த்த சூடாமணியை நோக்கி நடந்தாள். அவள் அருகே போய் நின்று பேசினாள்...

''நீங்க தமிழா?''

''ஆமா... மதுரைப் பக்கம்... நீங்க...?''

''காமாட்சி..' எனக்குக் கோயம்புத்தூர். எம். ஏ. முடிச்சிட்டு, விளையாட்டுப் போக்கில் யூ. பி. எஸ். ஸி. என்கிறதிலே வேலைக்குப் பரீட்சை எழுதினேன். நானே நம்ப முடியாதபடி என்னை செலக்ட் பண்ணிட்டாங்க. இந்த இன்ஸ்டிடியூட்டிலே ஒரு வருஷம் பயிற்சி கொடுக்கிறாங்க.. எனக்கு இது பிடிக்கலை; அதுவும் இந்த நடுக்காட்டுக்குள்ளே... இப்படிப்பட்ட அநாகரீகமான ஆட்களோட....'

''ஒரு வருஷம்தானே பல்லைக் கடிச்சுக்

சு. சமுத்திரம்



''உன் கரும்பை எப்படிடா இன்னும் பத்திரமா வெச்சிருக்கே?''
''தாத்தாகிட்டே குடுத்து வெச்சிருந்தேன்!''

ருங்க.''

''என்னாலே முடியாதுன்னு நினைக்கிறேன்; அம்மாவைப் பார்க்கணும் போல தோணுது; அவங்களைப் பிரிஞ்சு என்னாலே இருக்க முடியாது. இருந்த தில்லே. போயிடப் போறேன்.

ஆபீஸராகப் போகிற காமாட்சி கிட்டத்தட்ட அழுது விட்டாள். உடனே, சூடாமணி கைகளை உதறியபடி வேகத்தைத் திறந்து, அவளை உள்ளே இழுத்துக் கொண்டாள். முதுகைத் தட்டிக் கொடுத்தபடியே —

''போகப் போகச் சரியாயிடும்மா... மூணு வருஷங்களுக்கு முன்னாடி எங்க அம்மாவைப் பிரிஞ்சப்போ, நானும் இப்படித்தான்...''

சொல்லிக் கொண்டே போன சூடாமணி, திடீரென்று வாயை மூட, கண்கள் பனிநீரைக் கொட்டின. உடனே, காமாட்சி, அவள் முதுகைத் தட்டிக் கொடுத்தாள். சுமையை இறக்க வந்தவளிடம், சுமை கொடுக்கக் கூடாது என்று 'பின்யோசனை' செய்து சிரிக்க முயற்சி செய்தாள் சூடாமணி. ஆபீஸர் பயிற்சிப் பெண் கேட்டாள்.

''நீங்க எப்படி இந்த டெல்லிக்கு வந்தீங்க...''

''மதுரை பக்கம் ஒரு கிராமத்திலே, தோப்புலேயும், துரவுலேயுமா திரிஞ்சுட்டு இருந்தேன்; இது என் மாயா மகன்... ஆறு வருஷத்துக்கு முன்னாலே வேட்டியும் சட்டையுமாய்த் திமிர்னு தொலைஞ்சி போச்சுது. அப்புறம், இரண்டு வருஷத்து முன்னாலே பேண்டும், சட்டையுமாய், ஊருக்குத் திரும்பிச்சு. டெல்லியிலே, ஆபீஸ்களிலே கேண்டீன் காண்ட்ராக்ட் எடுத்து நடத்துறதாச் சொல்லிச்சு. முறை மாப்பிள்ளையாச்சே... விட முடியுமா? உங்களைப் பத்தி விவரமாச் சொல்லுங்க...''

''எனக்குக் கோயம்புத்தூர் பக்கம் ஒரு கிராமம், ஏழைக் குடும்பம். அப்பா, குடும்பச் சூழ்நிலையால் எல்லோருடைய படிப்பையும் நிறுத்திட்டாரு. ஆனால், கடைக்குட்டியான, நான், அப்பாவைக் கெஞ்சிக் கூத்தாடி எப்படியோ படிச்சிட்டேன். அதுவும் எம். ஏ. படிச்சிட்டேன். இந்த மாதத்திலிருந்து சம்பளம் கூட கொடுக்கிறாங்க. எடுத்த எடுப்பிலேயே மூவாயிரம் ரூபாய் தேறும். நீங்களே சொல்லுங்க. அக்காங்களுக்குச் சேலை எடுத்து அனுப்பலாமா...?''

''ஒங்களை மாதிரி இப்படி ஒரு குடும்பப் பாங்கான பொண்ணைப் பார்த்ததிலே ரொம்ப சந்தோஷமா இருக்குது. அத்தி பூத்த மாதிரி! — பணமா அனுப்புங்க. அவங்க என்ன வேணுமானாலும் வாங்கிக்கட்டும். இப்போ மாதிரியே எப்பவும் குடும்பத்தை மட்டும் மறக்கக் கூடாது.''

இதைக் கேட்ட காமாட்சி விம்மினாள். மீண்டும் தன்னைச் சமாளித்துக் கொண்டு, சூடாமணியிடம் தொடர்ந்தாள்.

''சந்தோசம்... கூழோ, வீட்டிலே குடிச்சிட்டு, கோயம்புத்தூர்ல எதாவது ஒரு ஆபீஸிலே வேலை பார்க்கலாம்னு நினைக்கிறேன். இதோ பாருங்க... இந்த பையன்களும், பொண்ணுகளும் எப்படி நடந்துக்கிறாங்கன்னு, சீ... இப்படிஎல்லாம் பழகுவாங்களா...

''அவங்க எப்படி இருந்தால் ஒனக்கென்னம்மா...? நாம உண்டு, நம்ம குடும்பம் உண்டுன்னு இருக்கணும். நீ ஆபீஸர் ஆயிட்டா உன் குடும்பத்துக்கே தனி மரியாதை வரும். எல்லாம் சரியாயிடும். என்னை உன் சொந்த அக்கா மாதிரி நெனச்சிக்கோ. எப்போ வேணும்னாலும் இங்கே நீ வாலாம். தப்பு.. தப்பு... உன்னோட அந்தஸ்துக்கு நான்தான் உன் கிட்டே வரணும்.''

''அக்கா தங்கைக்குள்ளே அந்தஸ்து எது?''

இப்படித்தான் இனிமையாகத் துவங்கியது அவர்களுடைய நட்பு. காமாட்சி, அவளைப் பெரிய அக்கா, பெரிய அக்கா என்று கூப்பிடுவாள். நல்ல நாள், கெட்ட நாள் என்று வரும் போதும், விடுமுறை நாட்களிலும், இருவரையும் ஒரே இடத்தில் காணலாம்.

என்றாலும், கண் முன்னால் வளரும் குழந்தையின் வளர்ச்சி எப்படி அன்றாடப் பார்வைக்குத் தெரியாதோ, அப்படி காமாட்சியின் மாறுதலும் படிப்படியாய் வளர்ந்து, சூடாமணியிடம் இருந்து அவள் அந்நியப்பட்டாள்.

காமாட்சி பேண்ட் சட்டை போடத் துவங்கினாள்; தலைமுடியைக் கத்தரித்தாள். அப்போதெல்லாம் சூடாமணியைப் பார்த்துச் சிறிது வெட்கப்படுவாள். இந்த சூடாமணிதான், ''இதிலே என்னம்மா தப்பு?'' என்றாள். இரண்டாவது மாதம் இன்னொரு ஆபீஸர் பயிற்சியாளன், அவள் தலையில் செல்லமாகத் தட்டிய போது, சூடாமணிக்கு அவன் மீது கோபம் வந்தது. ஆனாலும், அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. மூன்றாவது

மாதம், காமாட்சி சூடாமணியிடம் அடிக்கடி வருவதைக் குறைத்துக் கொண்டாள். நான்கைந்து ஆண் – பெண்களோடு கேண்டீனுக்குள் வரும் போது, ஒருத்தரின் தோளில் பட்டும்படாமலும் கிடக்கும் தனது கையை எடுத்துச் சூடாமணிக்குக் காட்டுவாள்.

சூடாமணியும், அவளை மறப்பதற்குப் பழகிக் கொண்டாள். ஆனாலும், ஒரு தடவை ஒருத்தனின் மோட்டார் பைக்கில், 'அப்படிப்பட்ட' நிலையில், அவள் போனதை மறக்க முடியவில்லை. மறக்கும் படியாகவும் அது இருக்கவில்லை. சூடாமணி கேண்டீனுக்கு வந்த அவளை, நேருக்கு நேராய்க் கண்டித்தாள். அப்போது காமாட்சி தலைகவிழ்ந்து நின்றாள். சந்தோஷப்பட்ட சூடாமணி அவள் முதுகைத் தட்டிக் கொடுத்தாள். 'ஒருத்தி கஷ்டப்படலாம், ஆனால் களங்கப்படலாகாது' என்றாள்.

ஆனால், மாலையில் நான்கைந்து பெண்களோடு காமாட்சி வந்த போது ஒரு பஞ்சாபிப் பெண், சூடாமணியைக் கை தட்டிக் கூப்பிட்டாள். அருகே வந்த சூடாமணியைப் பார்த்து, ''உன் வேலையைப் பார்த்துட்டுப் போயேன், இவளுக்கு நீ புத்தி சொல்ல உனக்கும் ஒரு தகுதி வேண்டாமா!'' என்று இந்தியில் பொரிந்து விட்டாள். அப்போதும், இந்த காமாட்சி ஒரு சிகரெட்டைப் பிடித்தபடியே காலில் ஒரு [illegible]ப்பாளைக் தட்டிக் கொண்டிருந்தாள்!

சூடாமணி, நினைவுகளை உதறித் தள்ள முடியாதபடி அல்லாடிய போது –

அர்ச்சுனன் – அதுதான் அவள் கணவன் – வந்தான். நீலக் கோடு போட்ட சட்டையும், பச்சைக் கரை போட்ட வேட்டியுமாய், கைகால்களில் பாதிப்பாதி தெரியும்படி சோர்வோடு வந்தான். அவள் கேட்காமலேயே பேசினான்.

''மோசம் போய் விட்டோம், சூடா... இந்த இன்ஸ்டிடியூட்லே மெஸ் நடத்த இதுக்கு மேலே காண்டிராக்ட் தரமாட்டாங்களாம். நாளைக்கே மூடிப்புடணுமாம். 'இந்த டெல்லியிலேயும், தமிழனுக்கு எதிரி இருக்கான் பாரு. டைரக்டரோட உதவியாள் ராமனின் சூழ்ச்சி. கேரளாவிலிருந்து தம்பியைக் கொண்டு வந்து கேண்டீன் நடத்தப் போறானாம்...''

சூடாமணி அவனை அதிர்ந்து பார்த்த போது –

''வெல்கம் சார், வெல்கம் சார், டைடியே சார்!'' – குரல்கள் கேட்டன.



வேலையில் சேர்ந்த ஆறு மாத காலத்தில் ஒரு தடவை கூட உள்ளே வராத வார்டன் சத்பதி, கேண்டீனுக்குள் வந்தார். நாற்பது வயது தேறும். கலர் பொம்மை சட்டை; ஏர் உழவன் கிருதா. இரண்டு பெண்களின் கழுத்துக்களில் கை போட்டபடியே ஜோக் அடித்தார். சூடாமணியை அவர் பார்த்து விட்டார். அவர்கள் இருக்கும் இடம் நோக்கி நடந்து வந்தார். அர்ச்சுனன் கெஞ்சினான்.

''சார், மூணு மாதமாவது டயம் கொடுங்க சார். வேற கேண்டீனைப் பார்த்து நிச்சயித்து விட்டுக் காலி பண்ணிடுறேன் சார்.''

''நத்திங் டூயிங்... உங்க மேலே ஏகப்பட்ட கம்ப்ளையிண்ட். இவங்க எல்லாம் கின்னுக்கிரை இல்லே. பெரிய பெரிய ஆபீஸர் ஆகப் போறவங்க. நாட்டையே ஆளப் போறவங்க. இவங்க விவகாரத்திலே, ஒன் ஒய்ஃப் தலையிடுதாம். அதோட, ஆறு வருடத்திற்கு மேலே தனிப்பட்ட ஒருவருக்குக் காண்டிராக்ட் கொடுக்க முடியாது.

சூடாமணி, கணவனோடு நின்று கொண்டு கைகளைப் பிசைந்தாள். கண்களால் கெஞ்சினாள். வார்டன் பார்த்தார். பரவசப்பட்டார். கிராமத்துப் பெண்.

சூடாமணியைப் பார்த்தபடியே, அர்ச்சுனனிடம் பேசினார்.

''இதுல்லாம் அந்த ராமனோட சூழ்ச்சி. அவன் பெரியவனா, நான் பெரியவனான்னு பார்த்துடலாம். நீங்க நாளைக்குக் காலி பண்ண வேண்டாம்.''

அர்ச்சுனன், வார்டனைக் கையெடுத்துக் கும்பிட்டான். அந்த கும்பிடுக்குரிய மனிதரோ, சூடாமணியை லேசாக முதுகில் தட்டினார். சூடாமணி விலகினாள். பெருக்கப் போகிறவள் போல் துடப்பத்தை எடுத்தாள்.

**❝அத்தான் நம்ம சாதி சனம் இருக்கிற கரோல்பாக்குக்கே போயிடலாம்.**




''வார்டன்தான் இருக்கச் சொல்லிட்டாரே!''

''அதனாலதான் சொல்றேன். காலி பண்ணணும்னு...''

மறுநாளே, புறப்பட்டார்கள் — அதுவும் அதிகாலையிலேயே...

அர்ச்சுனனும், சூடாமணியும் அளவுக்கு மீறிய சுமைகளோடு நடந்து கொண்டிருந்தார்கள். கேண்டீனில் வேலை பார்த்த ஒரு குஜராத்தி சிறுவனின் தலையிலும் சுமை இருந்தது. காலையில் காப்பி கிடைக்காமல் போன ஆபீஸர் பையன்களும், பெண்களும் அவர்களை அதிர்ந்து பார்த்தார்கள். பயிற்சி நிலைய இயக்குநரையும் அவரது உதவியாளரையும் கண்டபடி திட்டினார்கள். இவர்கள் போகிறார்களே என்று அல்ல. புதுக் காண்டிராக்ட்காரன், வரும் முன்பு இவர்கள் அனுப்பப்படுகிறார்களே என்று. அவர்கள் வருத்தம் அவ்வளவே.

அர்ச்சுனனும், சூடாமணியும் தலைச் சுமையும், கைச் சுமையுமாய் அந்த வளாகத்தின் முனையில் வந்த போது —

எதிரே வந்த ஒரு மாருதி கார் அவர்களைப் பார்த்து நின்றது. காரிலிருந்து ஒரு கண்ணாடி வாலிபன் அவர்களைப் பார்த்தான். அவன் தோளில் தலைபோட்டுக் கிடந்த காம் எனப்படும் காமாட்சி அவர்களைப் பார்த்து ஆச்சர்யத்தைக் காட்டினாள். சூடாமணி, மனத்துக்குள் பேசினாள். 'ஆபீஸர் அம்மாவுக்கு புரமோசனா? மோட்டார் பைக்காரன் போய், மாருதி கார்க்காரன் கிடைச்சுட்டானா... இனிமேல் 'ஏரோபிளேன்காரன்தான் கிடைக்கணும்.'

''கார்லே ஏறுங்கோ. பஸ் ஸ்டாண்டிலே விடுறேன்'' என்றான் அந்த வாலிபன்.

காரின் டிக்கியை திறக்கப் போன அர்ச்சுனனை, சூடாமணி கைமறித்தாள். காருக்குள் கிடந்தவளை நிலைகுத்திப் பார்த்தாள். கையிலே சிகரெட், இரவில் குடித்த மயக்கம், இன்னும் தெளியாதது போன்ற தலையாட்டு.. சூடாமணி தன்னையறியாமலேயே அழுதாள். சுமைக்கட்டை இறக்காமல் தலையைக் குவித்துத் தோளில் கண்களைத் தேய்த்து விட்டு நிமிர்ந்தாள். மீண்டும் அழுகை வந்தது. அந்த அழுகையைப் பார்த்த காமாட்சிக்கும் லேசாகப் பரிதாபம் ஏற்பட்டது. அதை வார்த்தைகளில் வெளிக்காட்டினாள்.

''இந்த புத்தி முதலிலேயே இருக்கணும்; வார்டன்தான் இருக்கச் சொன்னாராமே. அதுக்குப் பிறகும் எதுக்குப் போகணும்? எல்லாத்தையும் காலி பண்ணிட்டு இனிமே அழுதா என்ன பிரயோசனம்?''

சூடாமணி வெறிச் சிரிப்பாய் சிரித்தாள். கண்ணீரைக் கம்பீரமாய்த் துடைத்து விட்டு, அவளை, அந்த காமை, அழுத்தம் திருத்தமாய்ப் பார்த்தபடி பேசினாள்.

''நான் எனக்காக அழலேடி. ஒனக்காக அழுதேன். உன்னைப் பெத்தவங்களுக்காக அழுதேன்! அல்பம்!''

# 'ஜெ' கட்சிக்கு டைம்பாம் வைத்தாகி விட்டதாமே?



● சா. ரமேஷ்பாபு, லால்குடி.

? பர்னாலாவின் கன்னிப் பேச்சு எப்படி இருந்தது?

! தமிழ் கற்பது எவ்வளவு கடினம் என்பதைப் புரிய வைத்தது.

● கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

? 'ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் அரசைக் கலைப்பதற்கு முன் குறைந்தபட்சம் நூறு தடவையாவது யோசனை செய்வேன்' என்று பிரதமர் கூறியுள்ளது பற்றி...?

! ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப் படாத ஒருவர் இப்படி பேசுவதால்தான் கவலையாக இருக்கிறது.

● கே. எஸ். முத்து, கண்ணியம்புதூர்.

? நீங்கள் பிறந்த நாளை 'கேக்' வெட்டியா கொண்டாடுவீர்?

! அட நீர் ஒண்ணு. பிறந்த நாள் கொண்டாட்டத்துக்கெல்லாம் நமக்கேதுய்யா நேரம்? அதெல்லாம் சினிமா ஸ்டார்களுக்கும் அரசியல்வாதிகளுக்கும்தான்.

● என். முருகேஷ், பெருஞ்சேரி.

? இந்த வருஷத்துச் சிறந்த மனிதர் பரிசு யாருக்கு வழங்கப்பட வேண்டும்?

! விலைவாசி உயர்வைச் சகித்துக் கொண்டு எப்படியோ காலம் தள்ளும் சராசரி இந்தியனுக்கு.

● சாமா, சீர்காழி.

? தமிழ்நாடு அரசு பிளாஸ்டிக் கேன்களில் கெரஸின் விற்பனை மேற்கொள்ள விருப்பது பற்றி...?

! பிளாஸ்டிக் கேன் தயாரிப்பாளர் சிலருக்குக் கொண்டாட்டம்.

● பா. கிருட்டிணமூர்த்தி, கும்பகோணம்.

? போஃபோர்ஸ் ஃபைல்களின் இறுதி யாத்திரை நடந்து முடிந்து விட்டதா?

! பாடையில் ஏற்றியாகி விட்டது. ஊர்வலம் சீக்கிரமே புறப்படும். ராஜீவ் ஆட்சியில் அடக்கம் நடைபெறும்.

● எம். இராஜேந்திரன், லால்குடி.

? 'அரசாங்க ரகசியங்கள் எல்லாம் கருணாநிதி மூலம் விடுதலைப் புலிகளுக்குச் செல்கின்றன' என்று கருணாநிதி மீது பிரதமர் சந்திரசேகர் குற்றம் சாட்டியுள்ளாரே?

! இவ்வாறு நடந்திருந்தால் அது தேசத்துரோகம் ஆகும். அத்தகைய தேசத் துரோகமான காரியத்தைச் செய்த ஒருவருக்கு உடனே தண்டனை தர வேண்டியது பிரதமரின் கடமையாகும். அந்தக் கடமையைப் பிரதமர் செய்யாதிருப்பதும் தேசத் துரோகமாகும். ஆனால் பிரதமர் தயங்குவதானது அவருடைய அந்தக் குற்றச்சாட்டையே சந்தேகிக்க வைக்கிறது.

● வி. ஆர். லட்சுமி நாராயணன், சென்னை.

? அரசு ஊழியர்களின் ஊதியத்தை அடிக்கடி அதிகரிப்பதன் மூலம் அரசு அலுவலகங்களில் லஞ்சத்தின் அளவைக் குறைக்க முடியுமா?

! முடியவே முடியாது. ஊதிய உயர்வு விலைவாசி உயர்வுடன் தொடர்புடையதே யொழிய, லஞ்ச ஊழலுடன் தொடர்புடையது அல்ல. அரசாங்கத்தின் பல்வேறு விதமான கட்டுப்பாடுகள்தாம் லஞ்ச

* டைம்பாம் வைத்து...



* கலைத்து விடு...?



ஊழல் பெருகக் காரணம். சகலத்துக்கும் அரசிடம் கையேந்த வேண்டிய நிலைமை மாற்றி, மக்களைச் சுதந்திரமாக இயங்க அனுமதித்தால்தான் லஞ்சம் குறையும்.

● ரேவதி சுந்தரராஜன், சென்னை.

? ஷரத்பவாரையும்ராஜீவ் காந்திஒழித்து விட்டுத்தான் மறுவேலை பார்ப்பார் போலிருக்கே?

! கூடவே காங்கிரஸ்*க்குள் ஒற்றுமையையும் ஒழித்துக் கட்டிக்கொண்டு வருகிறார், ராஜீவ்.ஆனாலும்அவருக்குஇப்போதுள்ள மிகப் பெரிய பலம்: 1. எதிர்க் கட்சிகளிடையே வோட்டுச் சிதறல், 2. தேசிய முன்னணி அரசிடம் மக்களுக்கு ஏற்பட்ட ஏமாற்றம். இந்த இரண்டும் அவரது சர்வாதிகாரப் போக்குக்கு டானிக்!

● அ. கயல்விழி, விருத்தாசலம்.

? நமது பிரதமர் ஆங்கிலத்தை வெறுக்கிறாரே? எப்போதும் ஹிந்தியில் பேசுகிறாரே?

! ஆங்கிலம் தெரிந்தவர்கள் அவருடைய ஆங்கிலத்தை வெறுக்க நேர்வதால் அவர் ஹிந்தியில் பேசுவதே நல்லது!

● எஸ். அருண், காரைக்கால்.

? உல்ஃபா அமைப்புகளுடன் தொடர்புள்ள விடுதலைப்புலிகளின் ஆதரவு அரசைக் கலைப்பதில் தவறு இருக்கிறதா?

! உல்ஃபா அமைப்புடன் விடுதலைப் புலிகளுக்கு (அவர்கள் மறுத்தபோதிலும் கூட) ஒருவேளை தொடர்பு இருந்திருக்கலாம். அது முதல்வரின் கவனத்துக்கு வாராமலும் போயிருக்கலாம். (ராஜேந்திரன் — ஆன்டொனி பதவி மாற்றம் இவ்வாறு ஊகிக்க வைக்கிறது.) என்றாலும் கூட இதனால் கருணாநிதி உல்ஃபா ஆதரவாளர் என்றோ தமிழகத்தில் பிரிவினைவாதத்துக்கு ஆதரவாளர் என்றோ முடிவு கட்டி விட முடியாது. விடுதலைப் புலிகளுக்கு அவர் தரும் அனுதாப ஆதரவு தவறானாலும் அது ஈழத்தைப் பொருத்தமட்டில்தானேயொழியத் தமிழகத்தைப் பாரதத்திலிருந்து துண்டாடும் நோக்கில் அல்ல. பஞ்சாப் பிரிவினைவாதிகளுடனும் பயங்கரவாதிகளுடனும் கூடத் தாம் பேச்சு வார்த்தை நடத்தத் தயார் என்று சந்திரசேகர் கூறுவதை ஆட்சேபிப்போர் ஏராளமாய் உண்டு. அதனால் சந்திரசேகர் பஞ்சாப் பிரிவினைவாதிகளுக்கு ஆதரவு தருகிறார் என்று ஆகிவிடுமா?

● நல்லாலம் காசிதாசன், கீழ்கொளவேடு.

? 'ஜெயலலிதா கட்சிக்கு 'டைம்பாம்' வைத்தாகி விட்டது' என்று காளிமுத்து கூறியிருப்பது குறித்து?

! வெடிக்காமல் பிசுபிசுத்துப் போகும் டைம்பாம்களும் உண்டு; வெடித்தபோதிலும் அதிகச் சேதம் விளைவிக்காத டைம்பாம்களும் உண்டு. காளிமுத்துவின் டைம்பாம் அவர் பேச்சைப் போன்றது. வெத்துவேட்டு.

● கே. எஸ். கணேசன், ஈரோடு.

? கிரைம் நாவல்களுக்கு இருக்கும் மதிப்பு இலக்கிய நாவல்களுக்கு இல்லையே?

! அது உங்கள் மதிப்பீட்டின் தன்மையை, அளவுகோலைப் பொருத்தது. 'மதிப்பு' என்பதற்கு உங்கள் அகராதியில் பொருள் என்ன என்பதை முதலில் முடிவு செய்து கொள்ளுங்கள்.

● ஆர். கே. லிங்கேசன், மேலகிருஷ்ணன் புதூர்.

? ஜனநாயகம், ஜனநாயக சோஷலிஸம் — வேறுபாடு என்னங்க?

! பால், தண்ணீர் கலந்த பால் — இரண்டுக்கும் உள்ள வேறுபாடுதாங்க!

● எம். எஸ். பூங்கதிர், திருவெண்ணெய் நல்லூர்.

? கலைஞர் ஆட்சியைப் பாராட்டுவோர் அதிகமா? குறை கூறுவோர் அதிகமா?

! கண்மூடித்தனமாகப் பாராட்டுவோரும்குறைகூறுவோரும்அதிகம்.ஒவ்வொரு செயலையும் தனித்தனியே மதிப்பீடு செய்து, குறை நிறை காண்போர் குறைவு.



* அழித்துக்கட்டி



* கண்ணீர் பேச்சு...



* குற்றச்சாட்டு...

● ரூ. 20 பரிசு பெறுபவர்:

என். முருகேஷ்,
1—19, வடக்கு வீதி,
பெருஞ்சேரி,
மங்கைநல்லூர் அஞ்சல், — 609 404

# சிகரங்களை நோக்கி...

## 16

என்ன நேர்கிறது என்று அறிவதற்குள் அது நடந்து முடிந்தது.

முயல்களின் கடைசிச் சொட்டு உயிரும் அவர்களின் கைகளிலேயே வடிந்து விட்டது.

இமைகள் ஆடாமல் உயிர்மட்டும் ஆட. நின்றது நின்றபடி நின்றாள் ஒவியா.

முயலின் ரத்தத்தோடு அவளது கண்ணீரும் சேர்ந்து அவள் கைகளில் பிசுபிசுத்தது.

முயலையும் அவளையும் மாறி மாறிப் பார்த்தபடி
உணர்ச்சிகளின் மீது சவத்துணி போர்த்து விட்டு
ஒன்றும் பேசாமல் நின்றான் திருஞானம்.

மலடிக்குப் பிறந்த இரட்டைக் குழந்தைகள் மரித்துப் போனது மாதிரி அவர்களிருவரும் உயிர் நொறுங்கி உடைந்து போனார்கள்.

''எவர் வேலை இது? எப்படி இறந்தன முயல்கள்?'' உதடு துடித்தாள் ஒவியா.

அவன் அறிவான்; ஆனாலும், மௌனச் சகதியில் தன் வார்த்தைகளைப் புதைத்து விட்டான்.

தூக்கத்தில் நடப்பவனாய்ச் சென்று தோட்டத்தில் குழிவெட்டினான்.

இரு முயல்களையும் ஒரு குழியிலிட்டான். அவளை ஈரப் பார்வை பார்த்தான்.

''எழுந்து நில் ஒவியா. இரண்டு நிமிடம் மௌனம் கொண்டாடுவோம்.
இந்த பூமியில் எந்த ஜீவனும் தாழ்ந்ததில்லை. ஜீவராசிகளுக்கு உள்ளதெல்லாம் வெறும் வடிவ வித்தியாசம்தான்.

உயிரின் எடை ஒன்றுதான்.
ஒரு சாம்ராஜ்யத்தை விரிக்க முடிந்த ஒரு சக்கரவர்த்தியின் உயிரும், தன் வேரிலிருந்து ஓர் இலையை விரிக்க முடிந்த ஒரு புல்லின் உயிரும் ஒன்றுதான்.

மௌனங் கொண்டாடு ஒவியா! மரித்துப் போன உயிர்களுக்காக மௌனங் கொண்டாடு.''

முயல்களுக்கு வலிக்குமென்று மிருதுவாய் மண்தள்ளினான்.

புதைகுழியின் தலைமாட்டில் இரண்டு ரோஜாச் செடிகள் நட்டான்.

**வைரமுத்து**

நினைத்துக் கொண்டான்:

''இந்த ரோஜாச் செடிகள் மலர்விடும் காலத்தில் பூக்கள் பேசிக் கொள்ளும்:
எங்கள் முட்களே! உதிர்ந்து போங்கள்;
நாங்கள் சமாதானங்களின் சமாதியில் பூப்பூத்திருக்கிறோம்.''

●

இரண்டுமெழுகுவத்திகள்தீர்ந்து.இரண்டாம் மெழுகுவத்தியின் கடைசிச் சுடரில்
மூன்றாம் மெழுகுவர்த்தி பற்றவைக்க அவர்கள் முனைந்த போது கதவு தட்டப்பட்டது.

ஓடிப் போய்க் கதவு திறந்தாள் ஒவியா.

வெளியே —
பரபரப்பாய் ஒரு பாமரர் கூட்டம்.

உடம்பு உருகிய பிறகும் இன்னும் எரிந்து கொண்டிருக்கும்
மெழுகுவத்திகளாய்ச் சில கிழவர்கள்.

வாழ்க்கையைப் போலவே மேலாடையும் கிழிந்து போன சில பெண்கள்.

சின்னச் சின்ன வறுமைகளாய்ச்



சிறுவர்கள்.
தேக்குமரத் தேகம் கொண்ட இளைஞர்கள்.

கலங்கி வந்த கூட்டத்தை அவள் கண்களால் விசாரித்தாள்.

"கத்தி போல் விறைத்த காக்கிச் சட்டைகள் எங்கள் கந்தலைக் கிழிக்கின்றன தாயே!
கஞ்சாவைத் தேடித் தேடி அந்த லத்திகள் எங்கள்
கஞ்சிச் சட்டிகளையும் உடைத்து விட்டன அம்மா.

குதிரை லாடத்தில் சிக்குண்ட பிளம் பழமாய்,
பூட்ஸ் கால்களின் கீழே எங்கள் பிழைப்பே நசுங்கிப் பிதுங்குகிறதம்மா!

கணிதமே அறியாத எங்கள் பெண்கள் கம்பி எண்ணுவது தகுமா?"

"புற்கட்டுக்குள் கஞ்சா இருந்தது நிஜமா?"

"நிஜந்தானம்மா. ஆனால் சோற்றுக்குள் விஷம் வைத்தது
காக்கைக்குத் தெரியாதது மாதிரி கட்டுக்குள் வைத்த கஞ்சா எங்களுக்கும் தெரியாது.

உச்சிமலைப் பண்ணையில் எங்கள் உச்சந் தலையில் புற்கட்டை ஏற்றுவார்கள்;
குதிரை லாயத்தில் கொண்டு வந்து போடுவோம்.
இன்று அதிகாரிகள் மடக்கி எங்கள் கட்டைப்



## அடுத்த இதழ்



### இல்லறச் சிறப்பிதழ்

- கோவையில் வளரும் அடுப்பங்கரை விஞ்ஞானம்
- புரிந்து கொண்டது எப்போது?
  — தம்பதிகள் பேட்டி
- விளம்பரத்தால் விளையும் திருமணங்கள் வித்தியாசமாய் இருக்குமா...?
  — அலசல்
- சிக்கனத்துக்குச் சில யோசனைகள்
- மணவாழ்வின் மன அமைதி மந்திரம்.
- சிறுவர்களின் கேள்விக்குச் சரியான பதிலென்ன...?
  — வாசகர்களுக்குக் குவிஸ்

**படித்து மகிழ,**
**போற்றிப் பாதுகாக்க,**
**ஒரு சிறப்பிதழ்!**

பிரித்ததில் — உள்ளே கஞ்சா.

புட்டியில் விஷமிருந்தாலும் அது புட்டியில் ஒட்டுவதில்லை.
எங்கள் கட்டுகளில் கஞ்சா இருந்தாலும் அதில்
சற்றும் எங்களுக்குச் சம்பந்தமில்லை.

சந்தனக் கட்டைகளைக் கடத்தக் கழுதைகளைப் பயன்படுத்துவார்களாம்.

இவர்களுக்குக் கஞ்சாக் கடத்துவதற்குக் கழுதைகள் கிடைக்கவில்லை; எங்களைப் பயன்படுத்தியிருக்கிறார்கள்."

உக்கிரமான தொனியில் ஒவியா கேட்டாள்:
"உச்சிமலைப் பண்ணை யாருடையது?"

கணவன் பெயரை உச்சரிக்கத் தயங்கும் கிராமத்துப் பெண்ணைப் போல் தயங்கித் தயங்கி ஒருத்தி சொன்னாள்:
"பேரூராட்சித் தலைவர் பெரியசாமியுடையது.

●

"ஏறுங்கள் மனிதர்களே! ஏறுங்கள் மலை மேலே!
ஒருவர் கையை இருவர் கோத்து ஒன்றுபடுங்கள்.
இதுவரை நாம் எல்லோரும் ஒருகையால் தட்டியதில் ஒலியே எழும்பவில்லை.

நாம் எல்லோரும் மொத்தமாய்ச் சேர்ந்து—
இமைத்தாலே போதும். இடி இடிக்காதா?
சற்றே திரும்பிச் சரித்திரம் பாருங்கள்.

ஊருக்கு ஒரு சாலை இல்லாத இந்தியாவில்
ஆளுக்கு ஒரு சாலை.
ஏனிந்த இழிவு?

ஜாதிகள் — மதங்கள் — இனங்கள் — மொழிகள்
இவையெல்லாம் வரப்புகளே; வெறும் வரப்புகளே.

பல நூற்றாண்டுகளாய் நாம் வரப்புத் தகராறில்
நின்று வயல்களைத் தரிசுபோட்டோம்.
இந்திய சாம்ராஜ்யத்தில், நம் அரைஞாண் கயிறுகளை
அறுத்து எதிரிகள் கொடியேற்றியது அவர்களின்
பலத்தால் அல்ல; நம்மவர்களின் பலவீனத்தால்.

முப்பதுகோடி மக்களை நான்கு கோடி மக்கள் அடிமை கொண்டு
ஆண்டது எப்படி?

எண்ணூறு ஆடுகளுக்கு ஒரு மேய்ப்பன் போதும்.
ஆமாம் தோழர்களே!
நாம் ஆடுகளாய் இழிந்திருந்தோம்.

இனியேனும் உள்ளொளி பெறுவோம்;
ஒன்றுபடுவோம்.

மெல்லிய ரோமம்தான்!

கம்பளியை உங்களால் அறுக்க முடியுமா?

**ஸ்ரீ மஹா குருக்களான ஸ்ரீ முத்தண்ணாவாளுடைய**
**98-வது வருஷத்திய ஆராதனை மஹோத்ஸவம்**

## भक्तवात्सल्य जलधेः परमानन्दरूपिणः ।
## अस्मदाचार्यराजस्य प्रपन्नोऽस्मि पदांबुजम् ॥

எங்கள் ஸ்ரீ பெரியவாள் சேங்காலிபுரம் ப்ரும்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்வாளும் ப்ரும்மஸ்ரீ நாராயண தீக்ஷிதர்வாளும் ப்ரும்மஸ்ரீ ஆஞ்ஜநேய தீக்ஷிதர்வாளும் நடத்தி வந்த மஹாகுரு ஸ்ரீ முத்தண்ணாவாளின் 98வது ஆராதனை மஹோத்ஸவத்தை ப்ரமோதூத வருஷம் தை மாதம் 27-ம் தேதி சனிக்கிழமை முதல் தை மாதம் 29-ம் தேதிவரை (பிப்ரவரி 9, 10, 11) ஆகிய மூன்று தினங்கள் வழக்கம்போல் 4 வேதபாராயணம் ப்ரதிதினம் பால் காவடி எடுத்து வாத்ய கோஷங்களுடன் ஸ்ரீ ஸமாதியில் மஹந்யாஸ ருத்ராபிஷேகத்துடனும் பாகவத ஸம்பிரதாயப்படி பஜனை உஞ்சவ்ருத்தி ஸ்ரீ ராதா கல்யாணத்துடனும் ஸ்ரீ ஸுந்தரகாண்டத்தை விதிவத்தாய் கலசஸ்தாபனம் செய்து ஸ்ரீ ஸுந்தரகாண்ட பாராயணத்துடனும் தினமும் மாலை இரவு இரண்டு காலம் ப்ரவசனத்துடனும் திங்கள் கிழமை த்வாதசியன்று 16 வேத ப்ராம்மணாளுக்கு வஸ்திரம் தக்ஷிணை முதலிய உபசாரம் செய்து ஆராதனை தீர்த்தநாராயண பூஜைகளும் நடக்கிறபடியால் ஆஸ்திக பக்தர்கள் பூர்ணமாய் வஸ்திரம் அன்னதானம் தக்ஷிணாதானம் முதலியவைகளுக்கு நன்கு உபசரித்து ஸ்ரீ முத்தண்ணாவாளின் அனுக்ரஹத்தால் ஸகல பாக்யங்களையும் அடைய வேணுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்.

ஸ்ரீ ஸமாதி அனுக்ரஹத்தால் பல பக்தர்களுக்கு வயிற்றுவலி ஹ்ருதய நோய் மனோ விசாரம் சத்ருபாதை, குணபாதை முதலியவைகள் நீங்கி விவாஹம், புத்ரலாபம், உத்யோகலாபம், வியாபார லாபம், சத்ருஜயம் முதலிய க்ஷேமங்கள் ஏற்பட்டுள்ளது.

பக்தர்கள் தங்களின் நாம நக்ஷத்திரங்களை எழுதி M. O. செய்து ப்ரஸாதத்தை அடையக் கேட்டுக் கொள்கிறோம்.

இப்படிக்கு.
சேங்காலிபுரம் N. பாபு தீக்ஷிதர்.

உபகாரம் அனுப்ப வேண்டிய
முகவரி: A. லக்ஷ்மீபதி தீக்ஷிதர்
சேங்காலிபுரம் S.O., Pin 612 604. (Via) கும்பகோணம் R.M.S. தஞ்சாவூர் ஜில்லா.

கம்பளி என்பது ரோமங்களின் ஒற்றுமை.

சின்னச் சின்னத் துளிகள்தாம்!
கடலை உங்களால் இறைக்க முடியுமா?
கடல் என்பது தண்ணீரின் ஒற்றுமை.

அலைகள் இன்னும் ஒன்றுசேரவில்லை.
அதனால்தான் பூமி இன்னும் பூப்பூத்துக் கொண்டிருக்கிறது.

ஒன்றுபடுங்கள்.
கழன்று விடாமல் கைகோத்து நில்லுங்கள்.
உங்கள் உள்ளங்கையின் உஷ்ணத்திலேயே
கஞ்சாக்காடு பற்றி எரியட்டும்.

●

உச்சிமலை மீது —
இளைஞர்கள் ஏறினார்கள்; எறிவீட்டிகளோடு ஏறினார்கள்.
முதியவர்கள் ஏறினார்கள்; மூச்சுமுட்ட ஏறினார்கள்.
சிறுவர்கள் ஏறினார்கள்; சிராய்ப்புகளோடு ஏறினார்கள்.
கர்ப்பிணிகள் ஏறினார்கள்; கால்வழுக்க ஏறினார்கள்.
குமரிகள் ஏறினார்கள்; 'குலவை'யிட்டு ஏறினார்கள்.

"எதுவரை ஏறப்போகிறோம்?"

"இலட்சியத்தை அடையும்வரை."

உச்சிமலை ஏறிப் பார்வையைப் பரப்பினால் — பள்ளத்தாக்கு
முழுவதும் பச்சைப் பந்தல்.

காடு! காடு! கஞ்சாக்காடு!

நான்கு முதல் ஆறடி உயரம் கொண்ட கஞ்சாச் செடிகள் காடு முழுக்கக் காற்றில் அசைந்த போது அவைகள் போதையில் ஆடுவதாய்ப் புலப்பட்டது.

உள்ளங்கையைப் போல் ஐவிரல் கொண்ட இலைகள்;
பச்சைப் பச்சையாய்ப் பூக்கள்.

"இதில் கஞ்சா என்பது எது? இலையா...? பூவா...?"
தெரியாமல் கேட்டான் திருஞானம்.

"கஞ்சாச் செடி ஒரு பிசின் பிளிற்றும்.
அந்தப் பிசினும்
பூவும்சேர்ந்தால் கஞ்சா.
பிசின் மட்டும் — சாராஸ்.
இலையும் பிசினும் — பங்கி."
அறிந்து சொன்னான் ஓர் அனுபவசாலி.

"எப்போது மனிதன் இதை உட்கொள்ள ஆரம்பித்தான் ஒவியா?"

"எனக்குத் தெரியாது:
அதர்வண வேதத்திலேயே கஞ்சா கொஞ்சம் கசக்கப்பட்டிருக்கிறது."

●

அந்தக் கஞ்சாக் காட்டையே ஒரு மனிதவட்டம் வளைத்தது.

ஒரு ஜனசமுத்திரம் மலையேறக்கண்டு கஞ்சாக்காட்டுக்
காவலர்கள் கடுகி மறைந்தார்கள்.
பற்றியது; தீப்பற்றியது.
பச்சை இலைகளில் பற்றிப் பரவியது.
ஒரு சமுத்திரம் தீப்பிடித்த விசித்திரம் அது.

"பொசுக்குங்கள் தோழர்களே! பொசுக்குங்கள்! புலன்களின் விரோதம் இது:
பொசுக்குங்கள்."

எரிந்தது; மலை எரிந்தது. எரிமலை போல்
ஒரு குறுமலை எரிந்தது.
ஒரு புரட்சிக்குப் பிறகு சீனத்துத் தெருக்களில் எரிக்கப்பட்ட நச்சிலக்கியங்கள் ஏழு நாட்கள் எரிந்தனவாமே!
அப்படி எரிந்தது.

●

ஓ! லட்சியப் பெண்ணே!
உன்னை நினைப்பதற்கு என் நெஞ்சுக்கு
அகலம் போதாது.

ஓ! உன்னதத்தின் உயரமே!
உன்னைத் தொடுவதற்கு என் விரல்களுக்கு
நீளம் போதாது.

இந்த பூமிக்கு ஒளிகொடுக்கும் கிரகங்கள்
இதுவரை இரண்டு.

ஒன்று சூரியன்;
இன்னொன்று சந்திரன்.

ஒளிகொடுக்கும் மூன்றாம் கிரகத்திற்கு
'ஒவியா' என்று பெயர்.

"உன்னை ஒன்று கேட்பேன்;
கோபிக்கமாட்டாயே குணமயிலே...?"

"கேள்வி பாம்பாக இல்லையென்றால்
இந்த மயில் கோபிக்காது."

"உன் லட்சியம்தான் யாது?
உன் பயணம் எந்த துருவத்தைத்
தொடும்வரை?"

ஒவியா ஒருமுறை உள்மூச்சு வாங்கினாள்.
பிறகு பேசினாள்.

"திருஞானம்! இந்த பூமி உருண்டையில்
இதுவரை நாலாயிரம் கோடி மனிதர்கள்
பிறந்து வாழ்ந்து இறந்திருக்கிறார்கள்.

"கடவுள் இன்னிக்கும் என்னைச் சோதிச்சுட்டார் கமலா!"

"அப்படியா! எவ்வளவு போச்சு ரம்மியில்?"

— உ. ராஜாஜி.



## வாருங்கள் புலவர்களே...!
## வரலாறு படைப்போம்...!!

### வர்த்தமானன் பதிப்பகப் பேராசிரியர் ஜெ. ஸ்ரீசந்திரன் அழைப்பு!

"சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்!"

என்றார், மகாகவி பாரதியார். தமிழ் முழக்கம் என்பது என்ன? தமிழ்ப் பண்பாட்டின் முழக்கம்தானே! அதாவது தமிழிலே தோன்றிய இலக்கியங்களின் முழக்கம்தானே! ஆம் என்றால் திருக்குறளைப் பரிமேலழகர் உரையுடன், சிலப்பதிகாரத்தை அடியார்க்கு நல்லார் உரையுடன், சீவக சிந்தாமணியை நச்சினார்க்கினியர் உரையுடன் தெருவெல்லாம் முழக்கம் செய்ய முடியுமா? முழக்கம் செய்யலாம், என்ன பயன்? பலநூறு ஆண்டுகள் ஆயிற்றே இந்த உரைகள் தோன்றி. பரவிற்றா இலக்கியம் தெருவெல்லாம்? இப்படிக் கூறுவதனால் பழைய உரைகளைப் பழிப்பதாகக் கருதவேண்டாம். பழைய உரைகள் புலவர்களுக்காக எழுதப்பட்டவை; உயர்ந்தவை; பழைய உரையாசிரியர்கள் தமது கூர்த்த மதியால் எண்ணி யெண்ணிப் பார்த்து, மூல நூலாசிரியரே வியக்கும் வண்ணம் உரைவகுத்த வித்தகர்கள். ஆயினும் அவர்கள் வகுத்த உரையின் அருகில் பொதுமக்கள் நெருங்கக்கூட முடியாது! இந்நிலையில் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்வது எப்படி? பழகு தமிழில் பொதுமக்களுக்குப் புரியும்வகையில் எல்லா இலக்கியங்களுக்கும் உரை வகுத்தல்வேண்டும். அப்போதுதான் தமிழ் இலக்கியம் சிற்றூர்தோறும் செழுநகர்தோறும் சென்று பரவும்.

இந்த அரும்பெரும் பணியில் ஈடுபட்டுச் சில ஆண்டுகளில் பேரிலக்கியங்கள் பலவற்றை எவ்வளவோ கஷ்டங்களுக்கிடையில் தெளிவுரையுடன் எனது பதிப்பகம் வெளியிட்டு வருகிறது. ஏராளமாகத் தள்ளுபடி தருவதால் லாபம் ஒன்றுமில்லை! ஆயினும் நஷ்டம் வரக்கூடாதல்லவா? அதனால்தான் புதிய முறையில் 'சந்தாதாரர்க்கு மட்டும் சலுகை' என்று அறிவித்திருக்கிறோம். இப்போது காலத்தை மேலும் ஒரு மாதம் நீட்டித்திருக்கிறோம், சில மாற்றங்களுடன்! (விவரம் இதே கல்கியில் காண்க).

இன்னும் பல வகையான நூல்களை வெளியிட இருக்கிறோம். இதற்குத் திறம் வாய்ந்த உரையாசிரியர்கள் தேவை; பலதுறை எழுத்தாளர்கள் தேவை; தமிழ், ஆங்கிலம் - இரண்டிலும் புலமைமிக்க ஆசிரியரும் தேவை. தொடர்பு கொள்க.


**பேராசிரியர் ஜெ. ஸ்ரீசந்திரன்,**

**வர்த்தமானன் பதிப்பகம்,**
**ஏ.ஆர்.ஆர். காம்ப்ளெக்ஸ்,**
**141, உஸ்மான் சாலை,**
**தியாகராய நகர்,**
**சென்னை - 17.**
(பனகல் பார்க் அருகில்)

ஆனால், எல்லா மனிதனும் இந்த வானத்தின் கீழ்
எந்தக் காலத்தில் சந்தோஷமாயிருந்தான்?

வாழ்க்கையைத் தேடுவதிலேயே அவன் வாழ்க்கை தொலைந்து விட்டது.

இன்னும் நம் பாமரர்கள் மாற்றுத் துணிகளுக்காகவே
பண்டிகைகள் வைத்திருக்கிறார்கள்.

'மனிதனுக்கு ஆறடிதான்' என்ற வேதாந்தம் தோற்றுப் போனவர்களின் துயரகீதம் அல்லவா?

இந்த பூமியின் பரப்பு — 51 கோடியே 6 லட்சத்து 600 சதுர கிலோ மீட்டர்.

இதில் மனிதநிலப் பரப்பு — 14 கோடியே 8 லட்சத்து 42,900 சதுர கிலோ மீட்டர்.

இதில் எட்டடி நிலத்திற்காவது ஒவ்வொரு மனிதனுக்கும் உத்தரவாதமிருக்கிறதா?

பாபர் இந்த நாட்டுக்குள் முதன் முதலாய் நுழைந்த போது, இந்துஸ்தானத்தில் மனிதர்களை விடவும் விலங்குகளும் பறவைகளும் உயர்ந்தவை என்று சொன்னதாகச் சொல்லப்படுகிறது.

இன்றாவது எங்கள் பாமரர்கள் விலங்குகளை விட
உயர்ந்தவர்களாக விளங்குகிறார்களா?

1813இல் — 'லார்டு ஹேஸ்டிங்க்ஸ்' இந்தியர் பற்றி எழுதினான் இப்படி:

"இந்தியனை மிருகம் என்று சொல்லலாம். ஏனென்றால்
இவன் தரையில் படுத்திருக்கிறான்.

கட்டில் — மெத்தை என்ற நாகரிகத்தைக் கூட இவன் அடையவில்லை.

விலங்குதான் தரையில் படுக்கும்.

விலங்கைப் போலவே அவன் உண்டு உறங்குகிறான்."

இன்றேனும் அவர்களின் நாகரிகம் கட்டிலின் உயரத்திற்காவது ஏறியிருக்கிறதா?
இன்னும் நம் கிராமங்களில் தெருக்களின் உயரத்தை விட திண்ணைகளின் உயரம் குறைந்து கொண்டேதானே வருகிறது?

இங்கே ஒவ்வொரு பாமரனும் உன்னதம் எய்த வேண்டும்.

ஒவ்வொரு ஜீவனுக்குள்ளிருக்கும் விலங்குகள் அழிந்து
மனிதர்கள் மலர வேண்டும்.

உலகம் முழுவதும் ஒரே தீபம் வேண்டும்.

அந்த வாழ்க்கை என்ற தீபத்திற்கு என்னால் முடிந்த எண்ணெய் ஊற்ற நினைக்கிறேன்."

இப்போது திருஞானம் இடைமறித்தான்.

"நீ திரியைக் காப்பாற்ற எண்ணெய் ஊற்ற நினைக்கிறாய்; நானோ — தீபமே இருக்குமா என்றுதான் திகைத்து நிற்கிறேன்."

"திரை போடாமல் பேசுங்கள் திருஞானம்."

அவன் வார்த்தைகள் திரைகிழித்தன.

"உன் தந்தையைச் சந்தித்தேன் ஓவியா!
உன் தந்தையைச் சந்தித்தேன்."

— இன்னும் செல்வேன்.

# கிட்டத்தட்ட கின்னஸ்!

- இந்தியாவில் மிக அதிக நாள் ஓடிய சினிமா: "ஷோலே"! இது ஐந்தரை ஆண்டுகள் பம்பாயில் ஓடியது!
- பிரேம் நசீர் தம் சினிமா வாழ்க்கையில் 85 ஹீரோயின்களுடன் நடித்திருக்கிறார். ஷீலாவுடன் மட்டும் 110 படங்கள்!
- என். டி. ஆர்., தமிழிலும், தெலுங்கிலுமாக ராமர், கிருஷ்ணர், விஸ்வாமித்திரர் என மொத்தம் 42 புராணக் கதாபாத்திரங்களில் திரையில் தோன்றியிருக்கிறார்!
- மிக அதிக எண்ணிக்கையில் (3 லட்சம் பேர்) துணை நடிக, நடிகையர் பயன்படுத்தப்பட்ட படம்: ரிச்சர்ட் அட்டன்பரோவின் காந்தி.
- புள்ளி விவரப்படி, லதா மங்கேஷ்கரை விட, ஆஷா போன்ஸ்லேதான் அதிகப் பாடல்களைப் பாடி இருக்கிறார்!
- இந்தியாவின் முதல் சினிமா தியேட்டர்: கல்கத்தாவில் 1905 இல் ஆரம்பிக்கப்பட்ட எல்பின்ஸ்டன் பிக்சர் பேலஸ்.
- இந்தியாவில் அதிக சினிமாத் தியேட்டர்கள் கொண்ட மாநிலம்: ஆந்திரா.

தொகுப்பு: ஜூலி



# அழகு குறைந்தால் அன்பு குறையுமா?

















சுலோசனாவின் தோழி கூறியதைக் கேட்டு அதிர்ச்சிக்குள்ளானான் சுதாகர். அவளோ, பொதுவிடம் என்றும் பாராமல் அவனைத் திட்டித் தீர்த்துவிட்டாள். 'இவ்வளவு அழகான அம்சமான மனைவி இருக்கும்போது உங்களுக்குச் சின்ன வீடு ஆசை வந்ததே! நாசமாய்ப் போக!' என்று சபித்தாள். 'உங்கள் மனைவி இன்றைக்கு அழுதழுது ஆபீஸிலேயே தங்கிவிட்டாள். இனி வரமாட்டாள்' என்றாள், மறுபடியும்.

சுதாகர் அலறிப்புடைத்து சுலோசனாவின் ஆபீஸுக்குப் போனால் அங்கே நிர்வாகச் சார்பிலும் யூனியன் சார்பிலும் பிரதிநிதிகள் கூடி சுலோசனாவின் புகாரைப் பரிசீலித்து, சுதாகர் மீது என்ன நடவடிக்கை எடுக்கலாம் என்று விவாதித்துக் கொண்டிருந்தனர்!

சுதாகர் தான் குற்றமற்றவன் என்று மன்றாடியும் அவர்கள் ஏற்கவில்லை.

மறுநாள் சுதாகரின் அலுவலகத்திலும்

மேலதிகாரி அவனைச் சாடினார்! மனைவி தன்னைப் பற்றி எல்லோரிடமும் அபாண்டமான புகார் செய்திருப்பதை அறிந்து மன முடைந்து மண நல நிபுணர்களை அணுகினான் சுதாகர். வியப்பூட்டும் விதமாக சுலோவும் அவனுடன் வர ஒப்புக் கொண்டாள்!

**கணவனையும் மனைவியையும் தனித்தனியே விசாரித்தார் மண/மன நல நிபுணர் டாக்டர் கமீலா நாஸர். சுதாகர் சொன்னான்:**

"எவ்வளவு அன்பு வைத்திருந்தாள் என்னிடம்! இப்படி மாறி விட்டாள் என்று நம்பவே முடியவில்லை. அவள் சைவம் என்பதால் நான் அசைவம் சாப்பிடுவதையே நிறுத்திவிட்டேன். எங்களைப் போல் அன்னியோன்னியமாய் இருந்த தம்பதிகளே இல்லை. ஊரே எங்களைப் பார்த்துப் பொறாமைப்படும்; இப்போதோ ஊரே சிரிக்கிறது. இவ்வளவு அபாண்டமான பழியை என் மீது சுமத்த எப்படித் துணிந்தாள் என்றே தெரியவில்லை. உண்மையில் எனக்கு மனம், அமைதிப்பட்டு வருகிறது. இல்லறத்தில் அன்பு உடலுறவையும் அழகையும் கடந்த விஷயம் என்று நான் நினைக்க ஆரம்பித்துள்ளேன். அப்படி இருக்கும் போது எனக்கு வேறு பெண் மீது நாட்டம் ஏற்படுமா? இவள் நள்ளிரவில் திடீர் திடீரென்று அழுவாள். பொறுமையோடும் பரிவோடும் சமாதானப்படுத்துவேன். எவ்வளவோ அனுசரித்துப் போயும் பலனில்லாமல் போய் விட்டதே! எனக்கு வீட்டிலும் நல்ல பெயரில்லை; வெளியுலகிலும் நல்ல பெயரில்லை!"

சுலோசனா சத்தியமே செய்தாள் — "அவர் எதிர் வீட்டுப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறார். என் அழகு குறைந்து விட்டதால் என் பேரில் அவருக்கு ஈடுபாடேயில்லை. மெள்ள மெள்ள என்னை ஆதரவு அற்றவளாக வீட்டின் மூலையில் முடங்கச் செய்துவிட்டு அந்தப் பெண்ணை என் வீட்டுக்குள் என் இடத்துக்கு அழைத்து வந்துவிடுவார். என்னைத் தனிமைப்படுத்துவதற்காகவே எங்கள் ஒரே மகனைக் கோயமுத்தூருக்குப் படிக்க அனுப்பி விட்டார். என்னை வேலையை விட்டுவிடும்படி அடிக்கடி வற்புறுத்துகிறார். அப்போதுதான் நான் பொருளாதாரச் சுதந்திரம் இழந்து அலுவலக நண்பர்கள் ஆதரவும் இன்றித் தனிக்கட்டையாக இருப்பேன் என்று கணக்குப் போட்டிருக்கிறார். தன் பக்கத்தை வலுப்படுத்திக் கொள்ள வேண்டித் தன் தாயாரை வேறு அழைத்து வந்து வைத்துக் கொண்டிருக்கிறார்."

இருவர் வாதங்களையும் கேட்ட டாக்டர் கமீலாவுக்குப் பிரச்னை எளிதில் புரிந்தது. காதலித்து மணம் புரிந்து கொண்டிருந்தாலும் சுலோசனாவுக்கு அடிப்படையில் நம்பிக்கையில்லை. உள்ளூர இருந்த பயமும் அவநம்பிக்கையும் நாள்பட வளர்ந்து, உடலும் மனமும் வலுவிழந்த ஒரு தருணத்தில் வக்கிரமாக வெளிப்பட்டுள்ளன.

சுலோசனாவுக்கு வயது 43. மாதவிடாய் விலகும் காலம். இந்தக் கட்டத்தில் சில பெண்களுக்கு மன உளைச்சல், தாழ்வு மனப்பான்மை போன்றவை ஏற்படும். இந்த இயற்கைச் சிக்கலுடன், சுலோசனா தானாகவே வளர்த்துக் கொண்ட பயமும், அவநம்பிக்கையும் இணைந்து கொள்ள, அவள் ஒரு மன நோயாளியாகவே ஆகிவிட்டாள். கணவனின் ஆத்மார்த்தமான சொற்களும் செய்கைகளும் அவளுக்கு விபரீதமாகவே பட்டன. மன உளைச்சலில் எதிர் வீட்டுப் பெண் சக்களத்தியாகத் தோன்றினாள்!

இந்தப் பிரச்னைக்குத் தீர்வு காண்பதற்கு, முதல் கட்டமாகச் சுலோசனாவை மனநல மருத்துவமனையில் சேர்த்துச் சிகிச்சை அளிக்க வேண்டும். ஆனால் என்ன காரணமோ தெரியவில்லை; சிகிச்சைக்கு ஒப்புதல் கையெழுத்துப் போடப் பயப்படுகிறார் சுதாகர். அவருக்கு யோசிக்க அவகாசம் அளிப்பதன்றி வேறு வழியில்லை.

ஆராய்ந்து பார்த்தால், கலப்பு மணம் செய்து கொண்ட சுலோசனா, ஜாதி உணர்வை மறக்கவேயில்லை, என்பது தெரிகிறது. இரு தரப்பிலும் பெற்றோரிடம் எதிர்ப்பு இருந்திருக்கிறது. அது ஓர் அச்சத்தை உள்ளூரத் தோற்றுவித்திருக்கிறது. போகப் போக அழகும் குறைய, தன்னம்பிக்கை இழந்து, கணவன் தன்னை வெறுத்து விடுவாரோ என்ற பயம் அதிகமாகி விட்டது.

படித்த, ஓரளவு பொருளாதாரச் சுதந்திரமுள்ள பெண்ணாயினும் இத்தகைய பாதுகாப்பற்ற உணர்வு அவளுக்குள் இருந்திருக்கிறது.

எல்லாவற்றையும் கூட்டிக் கழித்துப் பார்த்தால், உண்மையான அன்பும், அன்னியோன்னியமான இல்லறமும் காதல் திருமணம் என்பதாலோ, பெற்றோர்கள் நிச்சயித்தத் திருமணம் என்பதாலோ விளைவதில்லை; கல்வியும் சுதந்திரமும் மட்டும் சந்தோஷத்துக்கு வழி காட்டுவதில்லை என்பது புரியும். மனோதிடமும் தன்னம்பிக்கையும் பண்புகளாக வளர்த்துக் கொள்ளப்பட வேண்டும். குழந்தைப் பிராயத்திலிருந்தே புகட்டப்பட வேண்டும். வாழ்க்கைத் துணைவனிடம் நம்பிக்கையற்ற காதல் கண்ணீரில்தான் முடியும்.!

— எஸ். ஆர்.

# "சதாம் தோற்கணும்!"



எழுத்தாளர்: எதிர் வீட்டுப் பயலுக்குக் கொழுப்பு ஜாஸ்தி.

மனைவி: என்னாச்சு?

எழுத்தாளர்: பத்திரிகைக்கு அனுப்புற கவரைக் கொடுத்துத் தெருமுனைத் தபால் பெட்டியில் போடச் சொன்னேன். "இன்று போய் நாளை வாராய்"ன்னு பாடிக்கிட்டே போறான்!

— ஜெயமணி மனோகரன், சென்னை — 99.

• • •

● தொடர்ந்து தினம் மழை பெய்யவே, அரிசிக் கடை ஒன்றில் வாடிக்கையாளர் ஒருவர், "மழை பெய்யுது; நல்ல விளைச்சல்; அரிசி விலையைக் குறைங்க" என்று கூறினார். தொடர்ந்து ஏழெட்டு தரம் இப்படி அவர் கூற, அரிசிக் கடைக்காரர் தாங்க முடியாமல்,

"அந்தம்மா கலைங்க, கலைங்கன்னு கதறுறாங்க; இவரு குறைங்க குறைங்கன்னு குதிக்கிறாரு! ரெண்டுமே நடக்கப் போறதாத் தெரியலே..." என்று சொல்ல,

விலைவாசி உயர்வையும் மறந்து அனைவரும் சிரித்து விட்டோம்!

— எஸ். எஸ். மணியம், ஸ்ரீவில்லிபுத்தூர்.

• • •

"உங்க வீட்டுக்காரர் பெரிய எம்.எல்.ஏ. ஆச்சே! வீட்டில் எப்படி இருக்காரு?"

"சட்டசபை மாதிரிதான். பேசவே மாட்டார்!"

— குருகிருஷ்ணா, திருச்சி — 2.

• • •

● ஒரு மன் ஏஜ் பையன் அசிங்கமாக இருந்த சினிமா வால்போஸ்டர் ஒன்றைக் கோபத்துடன் கிழித்துக் கொண்டிருந்தான். அதைப் பார்த்த பெரியவர் ஒருவர் சந்தோஷத்துடன், "பரவாயில்லையே... நல்ல பையனா இருக்கியே!" என்றார்.

அதற்கு அவன், "சும்மா இருங்க சார். போஸ்டர்ல மட்டும் பெரிசா சீன் போட்டுட்டாங்க. தியேட்டர்ல போய்ப் பார்த்தால் எதுவும் இல்லை," என்றானே பார்க்கலாம்!

— ந. தி. மோகன், மதுரை — 16.

• • •

"டீ. வி. பார்க்கும் போதே மாமியாரும் மருமகளும் ஏன் சண்டை போட்டுக்கிறாங்க?"

"'சதாம் தோற்கணும்'னு மருமகள் சொன்னாளாம். 'நீ என்ன சொல்றது? சதாம் ஜெயிக்கணும்'னு மாமியார் சொன்னாளாம். அதுதான் பெரிய சண்டையா வளர்ந்துடுச்சாம்!"

— ஜி. பரணி கோமதி, சென்னை — 8.

# இல்லே; ஜெயிக்கணும்!”



● என் மாமா எப்போதும் ஏதேனும் நோய் சொல்வது வழக்கம்.

ஒரு நாள் வயிறு சரியில்லை என்றார். என் பெண், “உடல்நலம்” என்ற புத்தகத்தை வைத்துக் கொண்டு, அவரை “இப்படி இருக்கிறதா? இப்படி இருக்கிறதா?” என்று ஒவ்வொன்றாக அறிகுறிகள் பற்றிய கேள்விகள் கேட்டாள். எல்லாவற்றிற்கும் மாமா, “ஆமாம், ஆமாம்” என்றார்.

என் பெண் சிரிக்காமல் “மாமா, நிச்சயமாக இப்போது நீங்கள் கர்ப்பமாக இருக்கிறீர்கள்” என்றாள்.

மாமா அன்றிலிருந்து நோய் என்று சொல்வதே யில்லை.

— எம். ஏ. பெரியசாமி, திருச்சி — 14.

● ● ●



“என்னடா இது? 1992 ஆம் வருஷத்துக்கு இப்பவே வாழ்த்து அனுப்பறே?”

“போஸ்டல் ஸ்டிரைக் முடிஞ்சு, தபால் பட்டுவாடா செஞ்சு, இது போய்ச் சேர, அனேகமாக டைம் சரியாயிருக்கும், அதனாலதான்!”

— ஆர். மீனாக்ஷி, சென்னை — 20.

● ● ●




● பதினோராம் வகுப்பு புதிய பாடத் திட்டத்தின்படி கேள்வித்தாளில், ஒரு சிறுகதையின் முதல் இரு வரிகளை மட்டும் கொடுத்துவிட்டுக் கதையை ஒரு பக்க அளவில் எழுதி முடிக்குமாறு கேட்டிருந்தார்கள். என் நண்பன் நேரமின்மையால், “கதை அடுத்த இதழில் தொடரும்” என்று முடித்தான்.

விடைத்தாள் திருத்தப்பட்டு அவன் கைக்கு வந்த போது ஓர் அதிர்ச்சி! 10க்கு 3 மார்க் போட்டிருந்த தமிழாசிரியர், “மீதி மதிப்பெண் அடுத்த பரீட்சையில்” என்று எழுதியிருந்தார்!

— என். ஸ்ரீராம், ஈரோடு — 3.





சிரிக்க வையுங்கள்;
சிங்கப்பூர் செல்லுங்கள்!






**டாக்டர் பதில்கள் :**

# உடலுக்குள் ரத்தம் உறைவதில்லையே, ஏன்?

● **அனு சுப்ரமணியம், பம்பாய் — 49.**

● **Colour Blindness என்பது பரம்பரையாக ஏற்படுமா? இதைக் குணப்படுத்த இயலாதா? மருத்துவம் படிக்கும் மாணவருக்கு இந்நோய் இருந்தால் படிப்பும் தொழிலும் பாதிக்கப்படாதா?**

●● **டாக்டர் லக்ஷ்மி நாகராஜன், சென்னை — 18:**

● ரெடினா என்று அழைக்கப்படும் விழித்திரைதான் நிறங்களை இனம் காணும் பணியில் உதவுகிறது. **Colour Blindness** உள்ளவர்களுடைய ரெடினாவினால் பச்சை மற்றும் சிவப்பு நிறங்களை மட்டும் இனம் காண முடிவதில்லை. இந் நிறங்கள் மஞ்சள் கலந்த சாம்பல் நிறமாகவே அவர்களுக்குத் தோன்றும்.

இந் நிலை, பரம்பரையாக ஏற்படக் கூடியதுதான். பொதுவாக ஆண்களே அதிகம் பாதிக்கப்படுவார்கள். குறைந்த அளவில் பாதிக்கப்பட்டு, தங்களுக்கு இக் குறை உள்ளது என்பது தெரியாமலே இருப்போரும் உண்டு. நெருங்கிய உறவில் திருமணங்களைத் தவிர்ப்பதன் மூலம் இதைத் தவிர்க்கலாம். தங்களுக்கு இக்குறை உள்ளது என்று உணர்ந்து அதனுடன் வாழப் பழகிக் கொண்டவர்கள் மருத்துவம் பயில்வதில் தவறில்லை.

● **சி. சந்திரசேகரன், வேலூர் — 1:**

● **காயம் ஏற்படும் போது வெளிப்படும் இரத்தம் உறைந்துவிடுகிறது. ஆனால் உடலினுள் இருக்கும் இரத்தம் உறைவதில்லையே?**

● காயம் ஏற்படும் போது இரத்தம் வெளிப்பட்டு தோலில் படுகிறது. சொர சொரப்பான பகுதியுடன் தொடர்பு ஏற்படுவதால் ரத்தத்தை உறைய வைக்கும் சில விசேஷ பொருள்கள் சுரக்கின்றன. சிதைந்து போன திசுக்களும் சில திரவங்களைச் சுரந்து ரத்த உறைவுக்கு உதவுகின்றன. உடலுக்குள் ரத்தம் தோலுடனோ வேறு சொர சொரப்பான பகுதியுடனோ தொடர்பு கொள்வதில்லை. உடலில் ரத்தக் குழாய்கள் பழுதடையும் போது மட்டும் உடலுக்குள்ளும் ரத்தம் கட்டிப் போய் (**Blood clots**) பல தொல்லைகள், நோய்கள் ஏற்படுகின்றன.

● **எஸ். ரமேஷ், மதுரை — 16:**

● **நண்பர் ஒருவர், அலுவலகத்திலிருந்து வீடு திரும்பி, குழந்தையுடன் விளையாடிக் கொண்டிருந்தார். திடீரென்று அவன் மேல் சாய்ந்து விட்டார். ஆஸ்பத்திரிக்குத் தூக்கிச் சென்றால் cerebral haemorrhage காரணமாக இறந்து விட்டார் என்றார்கள். அப்படியென்றால் என்ன?**

●● **டாக்டர் ஆர். பார்த்தசாரதி, சென்னை — 41:**

● நண்பருக்கு, அவர் அறியாமலே உயர் ரத்த அழுத்தம் இருந்திருக்கக்கூடும். ரத்தக் குழாயில் அடைப்பு ஏற்பட்டு ரத்த ஓட்டம் தடைப்படுவதால் மூளையில் ரத்தக் குழாய் வெடித்து விடும். இதைத்தான் **cerebral haemorrhage** என்பர்.

**— திருபர்.**

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: வெ. ராஜேந்திரன். இணை ஆசிரியர்: சீதா ரவி.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/-; விமானத் தபால் ரூ. 350/-.

# சுவையான இனிப்புப்பண்டங்கள் எளிதாகத் தயாரிக்கலாம்.

மில்க்மெய்டினால் தயாரிக்கப்பட்ட, சுவை நிறைந்த இந்த ஸ்பெஷல் இனிப்புப் பண்டங்களை உங்கள் குடும்பத்தினர் விரும்புவார்கள். இவற்றை எளிதாகத் தயாரிப்பதில் உங்களுக்கு ஒரே ஆனந்தம்தான்.

## பாதாம் கீர்

5 பேருக்கு
சமைக்க ஆகும் நேரம்: 20 நிமிடங்கள்

**தேவை**

மில்க்மெய்ட் —1 டின், புதுப் பால் —1 லிட்டர்
முந்திரிப் பருப்பு —50 கிராம் (6 டேபிள் ஸ்பூன்)
வாதாம் பருப்பு எஸ்ஸென்ஸ் —1/4 டீஸ்பூன்

**செய்முறை**

1. பாலைக் காய்ச்சி ஆற வைக்கவும். உடைத்த முந்திரிப் பருப்பை 2 கப் பாலில் 2 மணி நேரத்துக்கு ஊற வைக்கவும். ஊறிய முந்திரிப் பருப்பை மையாக அரைக்கவும்.
2. மில்க்மெய்டுடனும், அரைத்த முந்திரிப் பருப்பையும் சேர்த்து கலக்கவும்.
3. வாதாம் பருப்பு எஸ்ஸென்ஸை சேர்க்கவும்.
4. சூடாகவோ, குளிர வைத்தோ பரிமாறவும்.

## கடலைப்பருப்பு பாயாசம்

6 பேருக்கு
செய்ய ஆகும் நேரம்: 30-35 நிமிடங்கள்

**தேவை**

மில்க்மெய்ட் —1 டின்
கடலைப் பருப்பு —1 கப்
வெல்லம் —100 கிராம் (1/2 கப்)
ஏலக்காய் பவுடர் —1/4 டீஸ்பூன்
தேங்காய் —1 (துருவப்பட்டது)
முந்திரிப் பருப்பு —10 (விரும்பினால்)
நெய் —1 டேபிள்ஸ்பூன்

**செய்முறை**

1. கடலைப் பருப்பை 3 கப் தண்ணீரில் குழையும் வரை வேக விட்டு பருப்பை மசிக்கவும்.
2. வெல்லத்தை ஒரு கப் நீரில் கரைத்து வடிகட்டவும்.
3. தேங்காய்த் துருவலிலிருந்து ஒரு கப் கெட்டிப்பாலும் ஒரு கப் அடர்த்தி குறைந்த தேங்காய்ப் பாலும் எடுத்துக்கொள்ளவும்.
4. வெல்லப்பாகு, பருப்பு, அடர்த்தி குறைந்த தேங்காய்ப் பால் மற்றும் ஏலக்காய்ப் பொடியை கலவையாக்கிக் கொள்ளவும்.
5. கலவையை இளஞ்சூட்டில் சிறிது நேரத்திற்கு வேகவிட்டு மில்க்மெய்ட் சேர்த்து கிளறி கெட்டித் தேங்காய்ப் பாலை சேர்க்கவும்.
6. முந்திரிப்பருப்பை நெய்யில் வறுத்து எடுத்தபின் மீதியுள்ள நெய்யிலேயே தேங்காய்த் துண்டுகளையும் வறுக்கவும்.
7. பாயாசத்தில் முந்திரிப்பருப்பு, தேங்காய்த் துண்டுகள் மற்றும் நெய்யைச் சேர்த்து கலக்கவும். அடுப்பிலிருந்து இறக்கி பரிமாறவும்.

## இலவசம்

மில்க்மெய்ட் ரெஸிப்பி புத்தகம்
அதனைப் பெற போஸ்ட் பேக் 22,
புது தில்லி-110019
என்னும் முகவரிக்கு அனுப்பவும்.




## விந்தை பல செய்திட மில்க்மெய்ட்

நெஸ்லேயின் ஒரு தரமான தயாரிப்பு